


அருள்விளக்கே அருட்சுடரே அருட்ஜோதிச் சிவமே
அருளமுதே அருள்நிறைவே அருள்வடிவப்

பொருளே, இருள்கடிந்து என்னுளம் முழுதும் இடங்
கொண்டபதியே, என்னறிவே என்னுயிரே

எனக்கினிய உறவே, மருள்கடிந்த மாமணியே
மாற்றறியாப்பொன்னே, மன்றில் நடம் புரி

கின்ற மணவாளா வெனக்கே, தெருளளித்த திருவாளா
ஞானஉருவாளா, தெய்வநடத்தரசே நான்
செய்மொழியேற்றருளே.

(திருஅருட்பா-அருள்விளக்கமாலை-1

# ஸப்தகிரி

பிப்ரவரி - 1995


தனிப்பிரதி ரூ. 2 மலர் 25

வருடச்சந்தா ரூ. 24 இதழ் 9





பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீமல்லிகார்ஜுன சுவாமி - ஸ்ரீசைலம் (ஆ.பி.)

முதல் உள்ளட்டை : தெப்பத்திருவிழா - ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி திருக்கோயில் - திருப்பதி.

2-வது உள்ளட்டை : ஸ்ரீகபிலேஸ்வரர் - திருப்பதி.

பின்னட்டை : ஸ்ரீபிரமராம்பாள் தேவி - ஸ்ரீசைலம் (ஆ.பி.)

JAGADISH

# உங்களுடன்......

பலவகையான மொழி, இனம், கலாச்சாரக்கூறுகள் கொண்ட இப்பாரத மண்ணை பல பேரரசுகளும், சிற்றரசுகளும், ஜமீன்தார்களும் ஆண்டு சென்றதையும், இதுதவிர கடல் கடந்தும், எல்லை கடந்தும் பல வேற்றுநாட்டு அரசர்களும், அரசுகளும் ஆண்டதையும்



இந்திய வரலாறு விளக்கிக் கூறும். ஆண்டவர்கள் இந்து சமயத்தின் உட்பிரிவுகளைச் சார்ந்தவர்களாகவும் வேற்றுச் சமயத்தார்களாகவும் இருந்ததையும் அவ்வரலாறு சுட்டிக்காட்டத் தவறவில்லை. இதுபோது, அவ்ஆண்டவர்களால் இம்மண்ணில் ஆண்டவன் உறையும் கோயில்கள் பல, பலநிலைகளில், பல காலக்கட்டங்களில் நிமிர்ந்தும், பரந்தும், புகழ்பெற்றும் விளங்கின. ஆனால், அதே நேரத்துப் பல புகழ்ப்பெற்ற கோயில்கள் தரைமட்டம் ஆக்கப்பட்டதும், நிலை குலைந்து போனதும் இந்திய வரலாறு கூறும் மற்றுமொரு சோக செய்தியாகும். இது போன்ற பிரச்சனைகளுக்கும், ஆபத்துக்களுக்கும் அப்பாற்பட்டு, வெறுத்தோரையும் வந்தணைக்கச்செய்திட்ட, சிதைக்க வந்தோரையும் சிந்திக்க வைத்த, தூற்றச் செய்தோரையும் போற்றச்செய்திட்ட ஒரே இந்துச் சமயக்கோயிலாக அன்றும், இன்றும் பெருமையும், புகழும் கொண்டு விளங்குவது வேங்கடவன் நின்றருளும் திருமலைக் கோயிலாகும்.

இச்செய்திகளைச் சற்றே சிந்தித்துப் பார்ப்போமாயின், இத்திருமலைக்கோயில் தன்னையும், தன் இருப்பிடத்தையும், தன் பக்தர்களையும் காத்துக் கொள்வதிலும், தன் ஆற்றலைக் காண்பித்துக் கொள்வதிலும் - தனக்கென ஒரு தனியிடத்தை இந்தியக் கோயில் மற்றும் சமய வரலாற்றிலும், இலக்கிய வரலாற்றிலும் தக்கவைத்துக் கொண்டது தெள்ளெனத் தெரியவரும். பேரரசு வேந்தர்களும், சிற்றரசு செல்வந்தர்களும் மட்டுமின்றி, வேற்றுச் சமயத்தாரும் இக்கோயிலுக்கெனப் பொன்னும், பொருளும், நிலமும் வாரி வழங்கி, வள்ளல்கள் வரிசையில் தங்களை இனம் காட்டிட அவர்கள் காட்டிய துடிப்பு நன்கு நமக்குத்தெரியத்தான் செய்கிறது. அவ்வகையில் அவர்கள்தம் சேவையினைப் பயன்படுத்திக் கொண்டு, தன் புகழினை, தன் பக்தர்களின் "நம்பிக்கையினை நாளும் வளர்த்துக்கொண்டு வருவது மாயவனாம் ஏழுமலையான் உறைந்தருளும் திருமலையாகும்.

பாரத நாடு அன்னிய ஆட்சியின் அடிமைத் தளையிலிருந்து விடுதலைப் பெற்றபின்னர், இக்கோயில் தற்போது ஆந்திர மாநில அரசின் அறநிலையத் துறையின் கீழ்வந்துபோது, கோயிலின் நிருவாகப் பணியானது செயலாட்சித் தலைவர் எனும் பதவியின் கீழ் நேரடிப்பொறுப்பில் செயற்பட்டுவருகின்றது.

இவ்வகையில் இதுவரை பத்துக்கும் மேற்பட்ட செயலாட்சித்தலைவர்களின் பதவியின் கீழ் கோயில் நிருவாக அமைப்பான திருமலைத் திருப்பதி தேவஸ்தானம் செயல்பட்டு வந்துள்ளது. இறைவன் - பக்தர்கள் - ஊழியர்கள் எனும் மூவரையும் இணைத்துச் செல்லும் ஓர் இயக்கமாக தேவஸ்தானம் விளங்குகிறது. கோயிலின் புனிதத் தன்மைக்கும், யாத்திரிகர்களின் பக்தி உணர்விற்கும், ஊழியர்களின் தொண்டு மனப்பான்மைக்கும் எந்த வகையிலும் இழுக்கோ, குறையோ, தோய்வோ ஏற்படா வண்ணம் செயல்படவேண்டிய அடிப்படை அவசியம் செயலாட்சித் தலைவர் பதவிக்கு உள்ளது. அந்த வகையில் இது வரை பணிபுரிந்து சென்றுள்ள செயலாட்சித் தலைவர்களின் பதவிக்காலத்தினைச் சற்றே சிந்தித்துப் பார்த்தால், அவர்கள் தங்களுக்கென்றே ஒரு தனித்தன்மையினை தேவஸ்தான

நிருவாக வரலாற்றில் ஏற்படுத்தியே உள்ளனர் என்பது தெரியவரும். ஒவ்வொருவருடைய பதவிக்காலத்தின் போதும், திருமலைப்புகழ் விரிந்தும், பரந்தும், வளர்ந்தும் வந்துள்ளது. குழந்தையின் அலங்காரத்தில் பெற்றோர் மகிழ்வது போன்று, ஒருவர் உத்ஸவருக்கும், மூலவர்க்கும் புத்தாபரணங்களைச் செய்வித்தும் அணிவித்தும் பக்தர்களை மகிழ்ச்சியில் மூழ்கடித்தார் எனின், மற்றொருவரோ பக்தர்களின் வசதியை மனதிற்கொண்டு திருமலை யிலும், திருப்பதியிலும் பல்வேறு நிலைகளில் மேலும் பல தங்குவசதிகளை அமைத்திட, ஒருசிலர் இந்து சமய இலக்கியங்களின் பெருமையினைப் பரப்பிடும் நூற்றுக்கணக்கான நூல்களை வெளியிட, ஒரு சிலர் ஊழியர்- யாத்திரிகர் உறவினை மேம்படுத்திடும் வகையில் ஆக்கப்பூர்வமான திட்டங்களை வகுத்துக் தந்திட இவ்வகையில் தங்கள் பதவிக்காலத்தில் செயலாட்சித் தலைவர்கள் தங்கள் ஆற்றலையும், தொண்டுள்ளத்தையும் வெளிக்காட்டினர்.



அந்த அடிச்சுவட்டில் சுமார் இரண்டாண்டு காலம் செயலாட்சித் தலைவர் பதவி வகித்து தற்போது பதவி மாற்றத்தில் சென்றுள்ள திரு. டி.வி.எல்.என். மூர்த்தி அவர்கள், தானும் எந்தவகையிலும் மற்றவர்களுக்குச் சளைத்தவரல்ல எனும் விதத்தில், 'ஸப்தகிரி'யின் வளர்ச்சியில் முக்கிய பங்கேற்று, 'ஸப்தகிரி'யானது இறைவனது திருவுருவ வண்ணப்படங்களைத் தாங்கிப் புதுப்பொலிவுடன், காலக் கிரமத்தில் இதழ் வெளிவரும் வகையில் திகழச்செய்தார். மேலும் இத்தலைமுறையினர் கண்டு களித்திடும் வகையில் - நாடே போற்றி டும் வகையில் திருமலையில் உலக அமைதிக்காக ஸ்ரீமந்நாராயண இராமானுஜ சின்ன ஜீயர் தலைமையில் "மகாவிஷ்ணு யாகம்" எனும் பெரும் வேள்வியினைத் திருமலையில் வெற்றிகரமாக நடத்திக் காட்டியதும், வடநாட்டு மக்கள் பயனுறும் வகையில் கொல்ஹாபூரில் மற்றுமொரு வேள்வியினை நடத்திக்காட் டியதும், திருமலை யாத்திரிகர்களின் சிந்தனையில் என்றென்றும் நிழலாடும் வகையில், அவர்தம் சாதனைக்கு ஒருசிகரம் வைத்தாற்போல், சுமார் மூன்று கோடி ரூபாய் செலவில் ஏழுமலையானுக்குத் தங்கத்தேர் ஒன்றினை செய்வித்ததும் அவர்தம் தொண்டுணர்விற்கும் நல்லுள்ளத்திற்கும் கட்டியம் கூறும் நிகழ்ச்சிகளாகும். அத்தகுத் திறமைமிக்க திரு. டி.வி. எல்.என். மூர்த்தி அவர்கள் இன்று பதவிமாற்றம் காரணமாக வேறு அரசு பதவிக்குச் சென்றாலும், அவர்தம் ஆதரவும், அன்பும் தேவஸ்தானத்திற்கு என்றும் உண்டு என்று எதிர் பார்க்கிறோம். அதற்கு அம்மாலவனின் திருவருள் அவருக்குக் கிடைத்திட அவனருளையே நாடுகின்றோம்.



தற்போது தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவராக பதவி ஏற்றுள்ள திரு. என். ரமேஷ்குமார் அவர்கள், ஏற்கனவே தேவஸ்தானத்தின் இணைச் செயலாட்சித்தலைவராக சுமார் இரண் டரை ஆண்டுகாலம் பதவி வகித்து, அப்போதே தனது நிருவாகத் தனித்திறமையினைச் செயற்படுத்திக்காட்டியுள்ளார். திருமலையில் யாத் திரிகர்களுக்குக் கணிப்பொறி மூலம் தங்குவசதி ஒதுக்கீட்டு முறையி னைச் செயல்படுத்தியும், யாத்திரிகர் ஒவ்வொருவரும் 'லட்டு' பிரஸாதம் பெறும் வகையில் 'டோக்கன்' முறை அறிமுகப்படுத்தியும், தேவஸ்தான ஊழியர்களிடையே நேர்மையும், சேவை மனப்பான்மையும் விளங்கிட- வேண்டியதன் அவசியத்தை உணர்த்திடும் வகையில் கட்டுப்பாடான நிருவாக வழிமுறை களை கையாண்டும் தனது கடமை உணர்வினையும், சமய ஈடுபாட்டினையும் வெளிக்காட்டி னார். இளைஞரான அவர்தம் பதவிக்காலத்தில் திருமலை திருப்பதி தேவஸ்தானம் மேலும் தன்னைப் புனிதப்படுத்திக்கொள்ளும் வகையில் அவருக்கு அத்திருமலையான் திருவருள் புரிவாராகுக!

✿✿✿

# பகவானுடைய பக்த வாத்ஸல்யம்

திரு. T.A. க்ருஷ்ணமாச்சாரியர் - திருப்பதி.

**ப**கவானாவான் - குற்றமேதுமின்றி நற்குணங்களனைத்தும் தன்னிடம் நிரம்பப்பெற்ற ஸ்ரீமந்நாராயணன். அவனுடைய பக்தனாகிறான் - அப்பெருமானையும் அவன் குணங்களையும் ஆசையுடன் எப்போதும் தியானம் செய்பவன். அந்த பக்தனிடத்தில் அப்பெருமானுக்கு உள்ள வாத்ஸல்யமாவது - பக்தனுடைய குற்றங்களைக் குணமாகக் கொள்ளுகையென்னும் - அன்பின் முதிர்ந்த நிலைமையே. இந்த வாத்ஸல்யத்தைச் சிறிது அனுபவிப்போம்.

ஸ்நிக்தஸ்து வத்ஸல: (ஸ்நேஹமுடையவன் வத்ஸலன்) என்பது அமரகோசம். 'வத்ஸே = புத்ராதௌ ஸ்னேஹபாத்ரே, காம: = அபிலாஷ: அஸ்ய அஸ்தீதி வத்ஸல:' (அன்புக்கு இலக்கான பிள்ளை பெண் பேரன் பேர்த்தி முதலியவர்களிடம் அதிகமான ஆசையுடையவன் வத்ஸலன்) என்று வத்ஸல சப்தத்தை அவ்வமர கோசத்தின் உரை விவரிக்கிறது. 'வத்ஸாம்ஸாப்யாம் காமபலே' என்னும் பாணிநி முனிவரின் ஸூத்ரத்தின்படி - மகன் முதலியவர்களைக் குறிக்கும் 'வத்ஸ' என்ற சொல்லின் மேல், ஆசையுடையவன் என்று பொருள்படுகின்ற லச் என்ற விகுதி சேர்ந்து வத்ஸலன் என்னும் சொல் உண்டாகின்றது. இவற்றிலிருந்து, குழந்தைகளிடம் பெற்றோருக்கு உண்டாகும் அன்பே வாத்ஸல்யம் என்று தோன்றியிருந்தாலும், அவ்வன்பின் முதிர்ந்த நிலைமையே வாத்ஸல்யமென்று கொள்ளல் தகும். குற்றங்களைக் குணமாகக் கொள்ளுகையே அன்பின் முதிர்ந்த நிலைமையாகும்.

'ஸ்ரீபாஷ்ய ஜிஜ்ஞாஸாதிகரண வ்யாக்யானத்தில் 'ஸம்பந்தவிசேஷாந்விதேஷு ப்ரீதி: ஸ்னேஹ:, யஸ்ய விபாகா: அஸ்தாநபயசங்கித்வம், தோஷாநவபாஸ:, தோஷேஷ்வபி குணபுத்தி: இத்யாதய:' (= அதிகமான தொடர்புடையவர்களிடம் நாம் காட்டும் அன்பே ஸ்நேஹமெனப்படுகிறது, அதன் பரிபக்குவ நிலைகளாவன - யாரிடத்தில் நாம் அவ்வன்பைக் காட்டுகிறோமோ அவர்களுக்கு எவ்வகையான ஆபத்தும் உண்டாவதற்கு இடமில்லாதிருப்பினும், ஆபத்து நேர்ந்துவிடுமோ என்று அஞ்சுவதும், அவர்களிடம் உள்ள குற்றம் தோன்றாமலிருப்பதும், அக்குற்றங்களைக் குணமாகக் கொள்ளுதலும் முதலியன) என்று ச்ருதப்ரகாசிகாசார்யர் அருளிச்செய்கையாலே, அன்பின் எல்லை நிலமாக இதில் காட்டிய - குற்றங்களைக் குணமாக நினைத்தலையே வாத்ஸல்யமென்று கொண்டனர் நம்முடைய பூர்வாசார்கள். ஸமந்வயாதிகரண ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகையில் 'வாத்ஸல்யம் நாம தோஷேஷ்வபி குணத்வபுத்தி:, யதா மாதுர் வத்ஸே' (= வாத்ஸல்யமென்று பிரசித்தமாகச் சொல்லப்படுவது யாதெனில் - 'தோஷங்களையும் குணமாகக் கொள்ளுகையேயாம், தாய்க்குக் குழந்தைகளிடமிருக்கும் ஆசையே அது) என்று அவ்வாசிரியரே அருளிச்செய்துள்ளார். அந்தரதிகரண ஸ்ரீபாஷ்ய ச்ருத ப்ரகாசிகையில் 'வாத்ஸல்யம் நாம தோஷாநாதரஹேது: ஸ்னேஹ: யதா மாதுர்வத்ஸே' (= வாத்ஸல்யமென்று எல்லோராலும் கூறப்படுவது யாதெனில் - தோஷங்களை மறைப்பதற்குக் காரணமான ஸ்நேஹமேயாம், தாய்க்குப் பிள்ளையினிடமுள்ள அன்பே அது) என்று பணிததருளியவரும் அவ்வாசார்யரேயாவர். தன் மகனைக் குற்றவாளியாக யாரேனும் தன்னிடம் வந்து, குறை கூறினால், 'என் மகன் குறறமே செய்யவில்லை' எனறு அவர்களிடம் மறைப்பதோ மறுப்பதோ தாய் செய்கினறுளல்லவா? அதற்குக காரணமாக அவளிடம் அமைந்த ஸ்நேஹமே வாத்ஸல்யமென்று இங்குத் தோன்றினாலும், முதன் முதலில் கூறப்பட்ட - ஸ்நேஹத்தின் முடிந்த முதிர்ச்சியான - தோஷங்களைக் குணமாகக் கொள்ளுதலையே வாதஸல்ய குணமாக, மிகவுயரந்த அத்தாட்சி நூல்கள் கூறுமவற்றை இனிக் காட்டுவோம. அவை யாவன கடோபநிஷத்திலுள்ள தொரு மந்த்ரமும, ஸ்ரீபாஞ்சராத்ரவசனமும், ஆழவார்களருளிய பாசுரங்களும் ஆகும்.

'அங்குஷ்டமாத்ர: புருஷ: மத்ய: ஆத்மனி திஷ்டதி । ஈசாநோ பூதபவயஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே ।।' என்பது கடோபநிஷத்திலுள்ள (4-12) மந்த்ரம். பூதபவ்யஸ்ய ஈசாந: புருஷ: = முக காலங்களிலுமுள்ள சேதநாசேதனங்களுக்கு ஈச்வரனான புருஷன் (= ஸ்ரீமந் நாராயணன்) ஆத்மனி மத்யே அங்குஷ்ட



மாத்ர: திஷ்டதி = தன்னை உபாஸிப்பவனுடைய சரீரத் தில் நடுப்பகுதியில் - ஹ்ருத யத்தில், அவனது கைக்கட்டை விரலின் அளவுடைய திருமே னியைக் கொண்டவனாய் எழுந் தருளியிருக்கிறான். தத: நவிஜுகுப்ஸதே = முற்கூறியபடி முக் காலங்களிலுமுள்ள பொருள்கள னைத்துக்கும் ஈச்வரனாகையா லேயே, அதிகமான வாத்ஸல்யத் தினால் உபாஸகதேஹத்துள்ளி யிருக்கிற ரக்தம் மாம்ஸம் முத லிய தோஷங்களையும் போக்ய மாக - அனுபவித்து இன்புறத் தக்க குணமாகக் காண்கிறான் - என்பது உபநிஷத் பாஷ்யகா ரராகிய ரங்கராமானுஜஸ்வாமி அருளிய பாஷ்யத்தில் விளங் கும் பொருள். இங்கு நவிஜுகுப்ஸதே என்பதற்கு 'வெறுப் புக் கொள்வதில்லை' என்றரு ளிச் செய்வதே போதுமாயிருக்க, 'ன' என்பதற்கு முரண்பாடு என்னும் பொருளைத் திருவுள் ளம் பற்றி, வெறுப்புக்கு முர ணான, விருப்பத்தை - விருப்ப மிகுதியை (அதாவது குற்றங் களை போக்யமாக எண்ணு கையென்னும் வாத்ஸல்யத்தை) அடைகின்றான் - என்று மிக மிகச் சுவைபட உரையிட் டருளிய அந்த ரங்கராமானு ஜஸ்வாமி என்னும் பேருந்தகை யின் திருவுள்ளம் நினைந்து நினைந்து இன்புறத்தக்கதொன் றும்.

'கடுகந்தேந வித்தாயாம் பூமௌ
நவ த்ருணங்குரம் ।
யாந ஜிக்ரதி ஸாதேநு:
ஸ்வயோநித்வார மார்கத: ।
ஸத்யோ ஜாதஸ்யவத்ஸஸ்ய
தேஹமாலிந்ய ஸம்பதம் ।
யதாலிஹதி ஸோல்லாஸம் ததா
ஜீவஸ்ய கல்மஷம் ।
போக்யம் மமச லக்ஷ்ம்யாச்ச
வித்தி பங்கஜ ஸம்பவா ।।'

(எனது நாபிக்கமலத்தில் தோன்றிய நான்முகனே! துர்க்கந்தத்தாலே அசுத்தமாக் கப்பட்ட பூமியில் புத்தம் புதி தாத முளைத்த (தனக்குப் பிரி யமான) புல்லையும் மோந்துகூ டப்பாராத (அத்தனைத் தூய் மையுள்ள) பசுவானது - தனது கடைவழிவாயிலாக அப்போதே பிறந்த தன் கன்றினுடலில் உள்ள அழுக்கின் மிகுதியை எங்ஙனம் மகிழ்ச்சியுடன் நக் கிச் சுவைக்கின்றதோ, அதா வது தன் கன்றின் அழுக்கு பசுவுக்கு எப்படி போக்யமாக ஆகிறதோ) அங்ஙனமே (உன் னைப்போல் என் குழந்தையான ஜீவாத்மாவின் அழுக்கும் (பாப மும்) எனக்கும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக் கும் போக்யமாக - அனுபவித்து ரஸிக்கத்தகுந்த குணமாக ஆகி றதென்பதை அறிந்து கொள்) என்னுமிது ஸ்ரீபாஞ்சராத்ராக மத்தைச் சேர்ந்த ப்ரஹ்ம ஸம்ஹிதையில் பிரமதேவனுக் குத் திருமால் தனது வாத் ஸல்யத்தைப் பற்றித் தெரி வித்த வசனமாகும். இயற் கையாகவே தூய்மைபெற்ற பசு தன் கன்றின் வழும்பை போக் யமாகக் கொள்வதுபோல், பக வானும் தன் குழந்தையாகிய நம் குற்றங்களைக் குண மாகக் கொள்ளுகிறானென்பதை அதாவது பகவானது வாத்ஸல் யத்தை இவ்வசனம் நம் மனத் தில் பசுமரத்தாணிபோல் பதிய வைக்கும் அழகு சுவைக்கத்தக் கது.

இனி மயர்வற்ற மதிநலம் அரு ளப்பெற்ற (= அறியாமை ஐயம் திரிபுணர்ச்சி என்னும் மயர் வானது அடியோடு அழியும்படி நல்ல அறிவை பகவானால் அரு ளப்பெற்ற) ஆழ்வார்கள் மூவ ரின் பாசுரங்கள் மூன்றினை முறையே காண்போம்.

பொய்கையாழ்வார் அருளிய முதல் திருவந்தாதியில் நாற்பத் தோராவது பாசுரம் 'குன் றனைய குற்றம் செய்யினும் குணம் கொள்ளும், இன்று முத லாக என் நெஞ்சே - என்றும் புறனுரையேயாயினும் பொன் னாழிக்கையான், திறனுரையே சிந்தித்திரு' என்பது. இது ஆழ்வார் தம்து நெஞ்சுக்கு உப தேசம் செய்வதாக அமைந்துள் ளது. நான் சொல்வதைக் கேட்டு அப்படியே நடக்கும் எனது நெஞ்சே! நீ இன்று தொடங்கி, உள்ளுறச் சொல் லும் வார்த்தையாக அல்லா மல் வெளிக்குச் சொல்லுகிற வார்த்தையாக இருந்தாலும், அழகிய சக்ராயுதத்தைக் கையி லேந்திய ஸர்வேச்வரனைப் பற் றிய வார்த்தைகளையே எப் போதும் சிந்தித்துக் கொண்டு இரு. அப்படியிருந்தால் மலை போலே பெருத்து நமது முயற் சியால் அசைக்கமுடியாமலிருக் கும் நம் குற்றங்களை அப்பெ ருமான் குணமாகக் கொண்டு

நம்மைக் காத்தருள்வன். (குற்றங்களைச் செய்துவிட்டோமே நம்மை எங்ஙனே காக்கப்போகிறான் என்று அஞ்சாதே) என்பது இதன் பொருள்.

திருமழிசைப்பிரான் திருவாய் மலர்ந்தருளிய திருச்சந்தவிருத்தத்தில் நூற்றுப் பதினோராம் பாசுரம் - 'வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும் மாறில் போர், செய்து நின்ன செற்றத்தீயில் வெந்தவர்க்கும் வந்துன்னை, எய்தலாகுமென்பர் ஆதலால் எம்மாய நாயினேன் செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே!' என்பதாகும். இது எம்பெருமானை விளித்து ஆழ்வார் வேண்டிக்கொள்வதாக அமைந்துள்ளது. 'நான் வியக்கத்தக்க குணங்களையுடையவனே! உலகங்கட்கெல்லாம் தலைவனான பெருமானே! உன்னைத் தமது ஆற்றலுள்ள வரையில் வசைமொழிகளைக் கூறிப்பழித்தவர்களுக்கும், உன்னுடன் ஒப்பற்ற போரைச் செய்து உனது கோபமென்னும் தீயில் விழுந்து வெந்துபோனவர்கட்கும் உன்னை வந்தடையமுடியுமென்று பெரியோர்கள் கூறுவர். ஆகையால் (உன்னைப் பழிப்பதோ எதிரிட்டுப் போர் புரிவதோ ஏதும் செய்யாதிருப்பினும்) நாய்போல் மிக நீசனான நான்செய்த குற்றங்களை நற்றங்களாக - குணங்களாக் கொண்டு என்னைக் காத்தருளவேணும்' என்பது இதன் பொருள்.

பட்டர்பிரான் பணித்தருளிய பெரியாழ்வார் திருமொழியில் (4-9-2) 'தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிந்குரைக்குமேல், என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர் போலும் , மன்னுடைய விபீடணற்காய் மதிலிலங்கைத் திசை நோக்கி மலர்கண் வைத்த, என்னுடைய திருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்காளாவாரே' என்றுள்ள பாசுரம் ஸ்ரீரங்கநாதனுடைய குணப்பெருமையைச் சொல்லுகிறது. பெரிய பெருமாளாகிய திருவரங்கநாதர், தம்முடைய அடியவர் விஷயத்திலே, குற்றம் சொல்லத்தெரியாத பெரிய பிராட்டியாரும் கூட, குற்றம் சொன்னாளாகில், 'என்னடியார் நீ சொல்லியபடி குற்றம் செய்யவே மாட்டார்கள், அப்படி ஒருவேளை செய்தார்களேயாகில் நன்றே செய்தார்களாவர் (= என்நினைவின்படி அது குற்றமல்ல குணமேயாதலால் நன்மையே புரிந்தவர்களாவார்கள்) என்று அலட்சியமாக விடைகூறுவர். ஆகையால், பக்தியாகிய செல்வமுடைய ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக மதிள்சூழ்ந்த இலங்கையிருக்கும் தென்திசையை நோக்கி மலர்ந்த கண்களை வைத்துப் பள்ளிகொண்டருளிய என் ஸ்வாமியான திருவரங்கப்பெருமாளுக்கெல்லாம் வேறொருவர்க்கு எவரேனும் ஆட்படுவரோ? என்பது இப்பாசுரத்தின் பொருள். இதில் 'என்னடியார் அது செய்யார்' என்று அடியவர் செய்த குற்றத்தை மறுப்பது அல்லது மறைப்பது - முன்பு அந்தரதிகரணச்ருத ப்ரகாசிகையில் உள்ளதாகக் காட்டப்பட்ட 'வாத்ஸல்யமாவது தோஷங்களை மறைப்பதற்குக் காரணமான ஸ்நேஹமேயாகும்' என்றதனோடு சேரும். 'செய்தாரேல் நன்று செய்தார்' என்பது - முன்பு பலதடவைகள் காட்டப்பட்ட 'வாத்ஸல்யமாவது தோஷங்களைக் குணமாகக் கொள்ளுகையேயாகும்' என்றதனோடு ஒன்றுபடும். குற்றங்களையும் குணமாகக் கொள்ளுதலென்னும் வாத்ஸல்யத்திற்கு உதாரணம் விபீஷணாழ்வான் தன்னை வந்தடைவதற்கு முன்புவரையிலும், ராவணனோடு கூடியிருந்தபோது அவன் செய்த அநீதிகளுக்கெல்லாம் உதவியாயிருந்த பெருங்குற்றவாளியாக இருந்தும் அக்குற்றங்களனைத்தையும் குணமாகக் கொண்டல்லவா அவனைச் சேர்த்துக் கொண்டது? விபீடணனிடம் காட்டிய வாத்ஸல்யத்தை நம்மிடமும் காட்டி நம்மை விடாமல் கைக்கொள்ளும் அப்பெருமானுக்கன்றிப் பிறதேவதைகளுக்கு ஆட்படுதல் தகாதென்று - பெரியாழ்வார் நமக்கு உபதேசம் செய்வது உள்குழைந்து அனுபவிக்கத் தக்கது. ஆக இதுகாறும் ஆழ்வார்கள் மூவரின் திருவாக்குகளைக் கொண்டு வாத்ஸல்யத்தை விளக்கமாக அனுபவித்தோம். இனி இந்த வாத்ஸல்யமென்னும் மிக மிக உயர்ந்த குணத்தை ஆழ்வார்களில் தலைவரான நம்மாழ்வார் திருவேங்கடமுடையான் விஷயமாகத் திருவாய்மொழியில் அருளிய பாசுரங்கள் இரண்டினைக் கொண்டு அனுபவிப்போம்.

அதுதன்னில் மூன்றும் பத்தில் மூன்றுவது பதிகம் 'ஒழிவில் காலமெல்லாம்' என்று தொடங்கப்பெறுகிறது. திருவேங்கடமுடையானுக்கே எப்போதும் தொண்டு செய்யவேணுமென்று ஆழ்வார் பாரித்த பாரிப்பைக் கூறுகின்ற இப்பதிகத்தில் 4ம் பாசுரம் ஈசன் வானவர்க்கென்பன் என்றால் அது, 'தேசமோ திருவேங்கடத்தானுக்கு? நீசனேன் நிறைவொன்றுமிலேன் என் கண், பாசம் வைத்த பரஞ்சுடர்ச்சேர்த்திக்கே' என்ப

தாகும். குற்றங்கள் நிறைந்த நீசனாயும் குணங்களில் ஒன்றுமில்லாதவனாயும் இருக்கிற என்னிடத்தில் பாசத்தை வைத்து அதனால் பேரொளியைப் பெற்ற தேஜோமயமான திருமேனியையுடைய திருவேங்கடமுடையானை 'இவன் நித்யஸூரிகளுக்குத் தலைவன்' என்று சொல்லுவேன். அங்ஙனம் சொன்னால் அவனுக்கு ஏற்றமாகுமோ? என்பது இதன் பொருள். இதில் குணமொன்றுமின்றியே குற்றங்கள் நிறைந்த தம்மிடத்தில் திருவேங்கடமுடையான் வைத்த பாசமாக ஆழ்வார் அருளிச் செய்த அன்பாவது குற்றங்களையே குணமாகக் கொள்ளுகையென்னும் வாத்ஸல்யமே என்று ஆசார்ய ஹ்ருதயத்தில் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் 'மண்ணோர் விண்ணோர் வைப்பில்' என்று தொடங்கும் 160ம் சூர்ணிகையில் விரித்துரைத்தருளினர்.

அத்திருவாய்மொழியிலேயே 'உலகமுண்டபெருவாயா' என்று தொடங்கும் (6-10) பதிகமொன்றில் பத்தாம் பாசுரம் 'அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா, நிகரில் புகழாய் உலக மூன்றுடையாய் என்னையாள்வானே, நிகரிலமரர் முனிக் கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே, புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே' என்பது. ஆழ்வார் முன்பு ஒழிவில் காலத்தில் திருவேங்கடமுடையானுக்குச் செய்யவேணுமென்று பாரித்த (ஆசைப்பட்ட) கைங்கர்யமாகிய புருஷார்த்தத்திற்கு உபாயமாக - தஞ்சமாக, அப்பெருமானையே பற்றுவதை (சரணாகதி செய்வதை) அறிவிக்கும் பாசுரமாகும் இது. 'உன்னைவிட்டுப் பிரிந்திருக்க வல்லோனல்லோன் நான்' என்று சொல்லிக்கொண்டே 'அலர்மேல் மங்கை நித்யவாஸம் செய்யும் திருமார்பு படைத்தவனே, ஒப்பற்ற புகழுடையவனே உலக மூன்றுக்கும் தலைவனே, என்னோடும் கலந்து பழகுமவனே, நிகரற்ற அமரர்களும் முனிவர்களும் விரும்பி வந்து குழுமியிருக்குமிடமான திருவேங்கடமலையில் வாழுமவனே! காப்பாரின்றியே கைம்முதலுமில்லாத உன்னடியவனாகிய நான் உன் திருவடிக்கீழ்ப்பகுதியிலேயே வேறொருபயனில் விருப்பமில்லாமல் புகுந்துவிட்டேன்' - என்பது இப்பாட்டின் பொருள். பிராட்டியை முன்னிட்டுத் திருவேங்கடமுடையானைத் தஞ்சமாகப் பற்றுதலைக் குறிக்கும் இது தன்னில் பிராட்டியின் பரிந்துரைப்பால் (சிபாரிசு வார்த்தையால்) பெருமானிடம் தலையெடுக்கும் குணங்கள் சிலவற்றைக் குறித்தருளும்போது 'நிகரில்புகழ்' என்ற சொல்லால் வாத்ஸல்யத்தையே - குற்றங்களை நற்றமாகக் கொள்ளுகையாகிய ஒப்பற்ற குணத்தையே திருவுள்ளம் பற்றுகிறார் ஆழ்வார் - என்று முற்காட்டிய சூர்ணிகையிலேயே ஆசார்யஹ்ருதயகாரர் காட்டியருளியுள்ளார். புகழ் என்றால் புகழப்படும் குணம். அத்தகைய குணங்களில் ஒப்பற்ற குணம் - அதாவது நிகரில் புகழ் - வாத்ஸல்யமே என்பது ஆழ்வார் கருதியது என்கிறார் அவர். ஆக நம்மாழ்வாரும் வாத்ஸல்யத்தை - குற்றங்களை போக்யமாகக் கொள்ளும் தன்மையை அருளிச்செய்தமை சிறிது அனுபவிக்கப்பட்டது.

மாறனடி பணிந்து உய்ந்தவரான பகவத்ராமாநுஜ முனிவர் பெருமானும், தாம் அருளிய சரணாகதி கத்யத்தில் பெரிய பெருமாளைத் தஞ்சம் பற்றுமவர் - அப்பெருமானுடைய குணங்களைச் சொல்லும் அடைவில் பல குணங்களினுடைய நடுவில் சேர்த்து - இரண்டுதடவைகள் இவ்வாத்ஸல்யத்தை அநுஸந்தானம் பண்ணியிருந்தும் திருப்தியடையாமல் மூன்றுந்தடவையாகத் தனித்து 'ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே' ( அளிவிடமுடியாத ஒப்பற்ற கடல் போன்ற - பக்தவாத்ஸல்யமென்னும் குணம் படைத்தவனே) என்று பெருமாளை அழைத்தருளி வாத்ஸல்யத்தை ஒப்பற்ற நற்பண்பாக அநுஸந்தித்துள்ளமை காணத் தகும். இங்கு வ்யாக்யானம் செய்தருளிய ச்ருதப்ரகாசிகாசன் யரும் பெரியவாச்சான் பிள்ளையும் குற்றத்தைக் குணமாகக் கொள்ளுகையே வாத்ஸல்யமென்று வ்யாக்யானம் செய்துள்ளமை நோக்கத்தக்கது.

இதுவரையில் பகவானுடைய பக்தவாத்ஸல்யமென்னும் பெருங்குணத்தை வேதம் ஸ்ரீபாஞ்சராத்ரம் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகள் எம்பெருமானார் ஸ்ரீஸூக்த ஆசார்ய ஹ்ருதய சூர்ணிகை ச்ருதப்ரகாசிகாசன்யரின் திருவாக்குக்கள் ஆகியவற்றைக் கொண்டு ஏதோ தெரிந்த வரையில் விண்ணப்பித்தேன். இன்னும் பிள்ளை லோகாசார்யர் மணவாளமாமுனிவர் வேதாந்த தேசிகர் தொடக்கமான பெரியோர்களின் திருவாக்குக்கள் கொள்ளை கொள்ளையாக அவர்களருளிய க்ரந்தங்களில் காணக்கிடக்கின்றன. விரிவிற்கு அஞ்சி இத்துடன் விடைபெறுகிறேன்.





# ஸஹஸ்ர நாமம்



## நம்மாழ்வார் விளக்கம்

T.S. ராஜகோபாலன்

*ஸர்வ: சர்வ: சிவ: ஸ்தாணு:*
*பூதாதிர் நிதி ரவ்யய: ।*
*ஸம்பவோ பாவநோ பர்த்தா*
*ப்ரபவ: ப்ரவு ரீச்வர: ॥*

**25. ஸர்வ:** எல்லா சராசரங்களுக்குள்ளும் இருந்து நடத்துவோன் (ஸர்வ ஸ்வரூபன்)

*ஏண்பாலுஞ் சோரான் பரந்துளனாம் எங்குமே* (2-7-11)

[ஏண்பாலும்-எண்ணப்படும் இடங்களிலும், சோரான்-விடமாட்டான்.]

**26. சர்வ:** தான் உள்ளே புகுந்து இயக்கும் பிராணிகளின் அசுபங்களைச் சிதறச் செய்வோன்.

*வழி நின்ற வல்வினை மாளவித்து* ((1-6-8)

**27. சிவ:** பிராணிகளுக்கு மங்களஞ் செய்பவன்.

*மண்கொள் ஞாலத்து உயிர்க்கெல்லாம் அருள் செய்யும்* (3-6-11)

**28. ஸ்தாணு:** இதில் நிலைத்திருப்பவன்; நிலையான பலனை (அருளை) அளிப்பவன்.

*என் திடரே* (1-1-6)

[திடர்-திண்மையுடையவன்]

**29. பூதாதி:** யாவருக்கும் யாவற்றிற்கும் காரணமானவன்.

*தானோர் உருவே தனி வித்தாய்* (1-5-4)

[வித்து - விதை, காரணம்]

**30. நிதி: அவ்யய :** எப்போதும் அநுபவித்துக் கொண்டிருந்தாலும், இன்பத்திற்கு அழிவில்லாத நிதி.

*வைத்த மாநிதி* (6-7-11)

[விரும்பியவாறு அனுபவிக்க அமைந்த நிதி.]

**31. ஸம்பவ:** நிதிபோல் மறைந்திருந்



தாலும், பலவாறாகப் பிறந்தவன் (யாவரும் தன்னை அனுபவிப்பதற்காக.)

துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண் காண வந்து (3-10-6)

32. பாவந: இவ்வாறு அவதரித்துத் துன்பங்களைப் போக்குவோன்.

மரீஇய தீவினை மாள, இன்பம் வளர (2-7-9)

[மரீஇய-மருவிய, பொருந்திய]

33. பர்த்தா: தன்னைத் தந்து இவர்களைக் காப்பவன்.

எனக்கே தன்னைத் தந்த கற்பகம் (2-7-11)

34. ப்ரபவ: தேவர்கள் முதலான உயிரினங்களைக் காட்டிலும் மிகச் சிறந்த நிலை உடையவன்.

திருமகளார் தனிக்கேள்வன், பெருமையுடைய பிரானார் (1-6-9)

## 1.6. இவனது மேன்மை

35. ப்ரபு: அவதரிப்பதால் யாவர்க்கும் போகமும் மோக்ஷமும் அளிக்கவல்லவன்.

பிறவிக்கடல் நீந்துவார்க்கு - வீடு முதலாம் (2-8-1)

[வீடு முதல் ஆம்-மோக்ஷம் அளிப்பவன்.]

36. ஈச்வர: அவதாரங்களிலும் ஈச்வரத் தன்மை வாய்ந்தவன்.

தான் பரப்பி மண் தாவிய ஈசனை (3-4-11)

ஸ்வயம்பூ: சம்பு ராதித்ய:
புஷ்கராக்ஷோ மஹாஸ்வந: ।
அநாதி நிதநோ தாதா
விதா தா தாதுருத்தம: ।। 5 ।।

37. ஸ்வயம்பூ: தன்னைப் படைபபவன் இல்லாமல் தானே தோன்றியவன்.

தானே தனி தோன்றல் (பெ.திரு. 24)

38. சம்பு: இவ்வாறு அவதரித்து மங்களம் விளைவிப்பவன், பேரின்பம் விளைவிப்பவன்.

பவித்திரன் சீர் அடியேன் வாய்மடுத்துப் பருகிக் களித்தேனே. (2-3-9)

39. ஆதித்ய: சூர்ய மண்டலத்தில் இருப்பவன்.

40. புஷ்கராக்ஷ: தாமரை மலர் போன்ற கண்கள் உடையவன் (இவனது லக்ஷணம்).

தாமரைக் கண்ணனை (2-6-3)

41. மஹாஸ்வந: வேதங்கள் போற்றும் சிறந்த திருநாமங்களின் ஒலியை உடையவன். (உத் என்ற திருநாமம் வாய்ந்தோன்).

பாவியல் வேத நன்மாலை பல கொண்டு,
தேவர்கள் மாமுனிவர் இறைஞ்ச நின்ற (4-2-3)

42. அநாதி-நிதந: ஆதியும் அந்தமும் இல்லாதவன்; நித்ய யுவா.

தோற்றக்கேடவை இல்லவன் (3-6-6)

[தோற்றம்-பிறப்பு, கேடு-அந்தம், முடிவு.]

## 1.7 உலகங்களுக்குக் காரணமானவன்

[வானுலகம், மண்ணுலகம்-இவை இவனது செல்வம், இவை. இவனது லீலைக்காவன; இவை லீலா விபூதி. வீபூதி-செல்வம், வைகுண்டம் ஒன்றே நிலையானது.]

43. தாதா: பிரமனைத் தன்னுள் வைப்பவன் (தனது கர்ப்பத்தில் வைப்பவன்).

.....கொப்பூழ் செந்தாமரைமேல் திசைமுகன் கருவில் வீற்றிருந்து, படைத்திட்ட கருமங்களும் (5-10-8)

[திசைமுகன் கருவுள் வீற்றிருந்து-நான்முகனது சரீரத்தை அதிஷ்டித்துக் கொண்டு நின்று.]

44. விதாதா: இந்த கர்ப்பத்தை வளரச் செய்பவன்.

நான்முகனைப் பண்ணித் தன்னுள்ளே-தொன்மை மயக்கிய தோற்றிய சூழல்கள் சிந்தித்தே (7-5-4)

[மயக்கிய-மயங்கிக் கிடந்தவற்றை; தோற்றிய - படைத்த-பிரமனைக் கொண்டு]

45. தாதுருத்தம: இந்தப் பிரமனைக் காட்டிலும் மேம்பட்டவன்.

ஒரு மா முதல்வா! (8-3-9)
பிரமன்றனக்கும் நாயகன் அவனே (4-10-4)

அப்ரமேயோ ஹ்ருஷீகேச:
பத்மநாபோ 'மரப்ரபு: ||
விச்வகர்மா மநுஸ் த்வஷ்டா
ஸ்தவிஷ்ட: ஸ்தவிரோ த்ருவ: || 6 ||

**46.** அப்ரமேய: இந்தப் பிரமனாலும் அளவிடமுடியாத மேன்மையுடையோன்.

*உம்பர் உலகினில் யார்க்கும் உணர்வரியான்* (3-7-8)

[உம்பர் உலகினில்-மேலுள்ள உலகுகளில்; இந்திரன், பிரமன் போன்ற தேவர்களும் வாழும் உலகுகளில்.]

**47.** ஹ்ருஷீகேச: இந்த்ரியங்களை அடக்கி ஆள்பவன்; நமது இந்த்ரியங்கள் அவன் வசப்படும் மேன்மை வாய்ந்தோன்.

*இருடீகேசன் எம்பிரான்* (2-7-10)

**48.** பத்மநாப: பிரமனுக்கும் பிறப்பிடமான தாமரையைத் திருநாபியில் உடையவன்.

*பத்மநாபன்* (2-7-11)

**49.** அமரப்ரபு: பிரமன் முதலான தேவர்களுக்கு அதிகாரப் பதவிகள் அளித்து நடத்துமவன்,

*...அமரர்க்கும் அறிவு இயந்து, அயன் அரன்*
*என உலகு அளித்து அமைத்துளனே* (1-1-3)

[அறிவு-வைதிக ஞானம். இயந்து-ஈந்து.]

**50.** விச்வகர்மா: உலக நடவடிக்கைகள் யாவும் தனது செயல்களாகவே இருப்பவன்.

*ஞானம் அஃதே கொண்டு எல்லாக் கருமங்களும் செய்* (3-10-8)

**51.** மநு: மநநம் செய்பவன்; தனது சங்கல்பத்தாலே யாவும் செய்பவன்.

*முனியே* (10-10-1)

[முனி-படைக்கும் போது, "நான் யாவுமாவேன்" என்று சங்கல்பித்துச் செய்பவன்.]

**52.** த்வஷ்டா: உலகை தேவர், மாந்தர் போன்ற நாம ரூபங்களுடன் படைப்பவன்.

*முனிமாப் பிரம் முதல்வித்தாய் உலகம்*
*மூன்றும் முளைப்பித்த* (8-10-7)

[முனி மா பிரமன் - படைக்கும் வகையை மனனஞ்செய்யும் பிரமன். வித்து-முதற்காரணம்.]

**53.** ஸ்தவிஷ்ட: ஆதலால் மிகப்பெரியவன், எங்கும் பரந்திருப்பவன்.

*வேர் முதலாய் வித்தாய்ப் பரந்து தனிநின்ற* (2-8-10)

[வேர், முதல், வித்து! மூவகைக் காரணங்கள்]

**54.** ஸ்தவிர: எக்காலத்திலும் எங்கும் இருப்பவன்.

*எக்காலத்து எந்தையாய்* (2-9-8)

**55.** த்ருவ : அவதாரங்கள் பல செய்தும், தனது தெய்வநிலை குலையாமல் நிலைத்திருப்பவன்.

*...பரந்து தனி நின்ற* (2-8-10)

[தனி நின்ற-மேன்மையால் ஸ்ரீவைகுண்டநாதன் என்பது தோன்ற விளங்குவோன்.]

(தொடரும்)



ஸ்ரீநீலமேகப்பெருமாள் கோயில்
—திருக்கண்ணபுரம்.



# நாம் வணங்கும் ஞானபானு



திரு. ஜி.ஆர். சுப்பிரமண்யன் - மதுரை.

ஆதிசங்கரர் நிறுவிய அறு வகைச் சமயங்களில் சௌரம் ஒன்ருகும். இது சூரிய தேவனை வழிபடும் முறையைக் குறிக்கிறது. சூரியனே உலக இயக்கத்திற்கெல்லாம் அதிபதி. அவன் நாள்தோறும் காலையில் எழுந்து தன் ஒளிக்கதிர்களை உலகெலாம் பரப்பி மாலையில் மேலைத்திசையில் மறையும் தன் தொழிலைப் பரிபூரணமாகச் செய்தாலன்றி உலகில் உயிர்கள் வாழமுடியாது. பயிர் பச்சைகள் செழிக்கமுடியாது.

"பரிதியே! பொருள் யாவிற்கும் முதலே!
பானுவே! பொன்செய்
பேரொளித்திரளே!
கருதி நின்னை வணங்கிட வந்தேன்
கதிர் கொள் வாண்முகம் காட்டுதி
சற்றே"

என்று பாரதி வேண்டுகிருர்.

ஞாயிற்றின்கண் ஒளிதருந் தேவா!
மன்னு வானிடைக்
கொண்டுலகெலாம்
வாழநோக்கிடும் வன்னிய தேவா

என்று இறைஞ்சுகிருர்.

சிலப்பதிகாரம் எனும் பெருங்காப்பியத்தை எழுதிய இளங்கோ அடிகள்

"ஞாயிறு போற்றுதும்,
ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோல்
பொற்கோட்டு
மேருவலந்திரிதலான்"

என்று பாடிப்பரவுகிருர்.

சிவபெருமானின் மூன்று கண்களில் ஒன்று சூரியன் என்பதிலிருந்தே அது எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தது என்பது தெரிகிறது.

"ஆதித்யானாம்
அகம் விஷ்ணு:" என்று அர்ஜுனனுக்குத் தன் விபூதியோக மகிமையை விளக்க வந்த கண்ணன் "ஜ்யோதிஷாம் ரவி ரம்சுமான்" என்று உலகுக்கு ஒளி தருபவைகளில் நான் ஞாயிறு (சூரியன்) என்று பெருமையுடன் கூறுகிருர்.

நவக்ரஹ தேவதைகளில் அவனே ஏக சக்ராதிபதியாக நடுநாயகனாக விளங்குகிருன். சூரியனைச் சுற்றியே க்ரகங்கள் (கோள்கள்) உள்ளன. சூர்ய மண்டலத்தைச் சேராதவையே நக்ஷத்திரக்கூட்டங்கள் (விண் மீன்கள்).

சூரியனை சோதிட சாஸ்திரம் சிம்மராசிக்கு உரியவனாகவும், கிரகங்களுக்கு நாயகனாகவும், நடுநிற்பவனாகவும் கூறுகிறது. பித்ருகாரகனாகவும், ஆயுள் காரகனாகவும், ஆரோக்யகாரகனாகவும், தாம்ர வர்ணமும், சத்வ குணமும், சொந்தமகனான சனிக்கும் பகைவனாகவும், கோதுமை தானியத்தை விரும்பி ஏற்கின்றவனும், கோடையே பருவமாகவும், பித்தத்தை உண்டு பண்ணும் தன்மை உடையவனாகவும் சூரியன் வர்ணிக்கப்பட்டுள்ளது.

சூரியன் ஸ்வயம் பிரகாசமாக தானே ஜொலித்துக் கொண்டு உலகுக்கெல்லாம் ஒளியைத் தந்து கொண்டிருக்கிருர். சூரியனுக்கு ஸப்தாச்வன் என்று பெயர். அவனுடைய



தேரில் ஏழு ( ஸப்த) குதிரைகள் உண்டு என்று சொல்வார்கள். இந்தக் குதிரைகைள்தான் (அச்வம்) அவனது கிரணங்கள் (ஒளிக்கற்றைகள்) ஆகும். அதாவது சூரியனுக்கு ஏழு வகையான வர்ணங்களை வெளியிடும் ஆற்றல் இருக்கிறது என்பது இதன் பொருள். ஒரே கிரணம்தான் ஏழாக விரிந்து பல்வேறு நிறங்களாகக் காணப்படுகிறது. இந்த ஒரே கிரணம் தான் ஏழாகும் என்று தைத்திரிய ஆரண்யகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

“ஏகோ அச்வோ வஹதி ஸப்ததாமா” சூர்யன் வெண்மையாக இருக்கின்றான். இந்த ஒரே வெண்மைதான் ஏழு வேறு வேறு வண்ணங்களாக பிரதிபலிக்கின்றது.

## அஷ்ட மூர்த்திகளில் ஒருவன்

ஈஸ்வரனுக்கு அஷ்ட மூர்த்தி என்று பெயர். பூமி, நீர், காற்று, அக்னி, ஆகாசம் (வெளி), சூரியன், சந்திரன், யாகம் செய்கிறவனான எஜமான் ஆகிய இந்த எட்டுமே ஈஸ்வரனின் மூர்த்திகள். ஆக, இந்த எட்டு மூர்த்திகளில் சூரியன் ஒன்றாகிறது.

சூரிய வெப்பம் இல்லாவிட்டால் உலக வாழ்க்கையே சாத்யம் இல்லை. ஆக, வெங்கதிரோனாக அவன் இருந்தாலும் அவன் உணவு, உலக வாழ்க்கைக்கு வேண்டிய மழை, பருவக்காற்று எல்லாவற்றுக்கும் காரணீதனாக இருக்கின்றான்.

## வேத நாயகன்

“ஆதித்ய வர்ணம் தமஸப் பரஸ்தாத்” என்று சூரியனைப் போற்றுகிறது வேதம். யஜூர் வேதத்தில் அருண காடகம் என்று சூரியனைப் பற்றிப் பேசப்படுகிறது. ஸாம வேதத்தின் ‘சுக்ரியம்’ என்ற வேதுகான ஸாமாக்கள் பெரும்பான்மை சூரியனையே போற்றுகின்றன. ரிக்வேதமும் உதய ஜோதியை (ஏழு ஞாயிறு) பலவாறு வர்ணிக்கிறது. பரதத்துவத்தை ஒப்பிடவும், சற்றே உணரவும் உதவும் உயர் கடவுள் இவனே. ஆகவேதான் நமது ஆன்றோர் சூரிய தேவனை உபாசனை செய்வதை சிரேஷ்டமாகச் சொல்கிறார்கள்.

சூரியனைப் போன்று ஒளிமயமானதாயும் (அஞ்ஞான இருளுக்கு அப்பாற்பட்டதாயும்) பரம்பொருள் இருப்பதாக வேதம் முழங்குகிறது. இந்த மேலாம்பரம்பொருளை வணங்கும் போது, உதாரணத்திற்கு சூரியனையே உபமானமாக நமது முனிசிரேஷ்டர்கள் கூறியிருக்கிறார்கள். இறைவனை வர்ணிக்கையிலும், ஒளிமயமானவற்றை விளக்குகையிலும் சூரியனையே உதாரணமாகக் குறிப்பிட்டுள்ளனர்.

அனாதிகாலம் தொட்டு நியதிக்குப்புறம்பின்றியும், ஒழுங்குடன் ஒரே சீரான கதியில் இயங்கிவரும் ஆதவனைக் கண் காணும் தெய்வமாக நமது முன்னோர்கள் போற்றி வந்துள்ளனர். திருமுருகாற்றுப்படையும்,

“பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டா
அங்கு ஓவற
இமைக்குஞ் சேனர் விளங்
கவிரொளி”

என்றும்,
கலிவெண்பாவும்,
“பகுதி பலவும் எழுந்து
சுடர் பாலித்தாற் போல
குலவு மகரக் குழை”
என்றும் பாராட்டுகின்றன.

அனைத்து உயிரினங்களும் உறக்கம் கழித்து விழித்தெழுந்து தங்கள் பகற்பொழுதை உற்சாகத்துடனும், மனக்களிப்புடனும் ஆரம்பிக்கக் காரணமான தேவனை - சூரியனைப் போற்றுகின்றன.

‘அலங்காரப்பிரியோ விஷ்ணு: அபிஷேகப்பிரியஸ் சிவ: நமஸ்காரப் பிரியோ பானு:’ ஆகவே தோத்திரம் செய்ய ஏற்றக் கடவுள் தாமிரவர்ணனாய், சகல உயிரினங்களும் காணும் வண்ணம் மங்களகரமாய் வானில் ஊர்ந்து பவனி வருகிறான். அவனே “பப்ரூ” எனப்படும் சூரியன் என்று பேசுகிறது ஸ்ரீருத்ரம். கண்ணுக்கு மெய்யாக, எவரும் எளிதில் காணக்கூடிய விதத்தில், தேஜஸ்வியாக சகல உயிர்களும் போற்றும் விதத்தில் உருவும், அருவமும் ஆனவனை, எவன் சந்நிதானத்தில் சகல உயிர்களும் இயங்கித் தத்தம் கடமைகளைக் குறைவற ஆற்றுகின்றதோ அந்த ஸர்வவல்லமை பொருந்திய மங்கள ஸ்வரூபியை வழிபடும் மங்களமார்க்கமாக சூரியதேவஉபாசனையை வகுத்து நமக்கு அளித்துள்ளார் ஸ்ரீஆதிசங்கரர். அதுவே சௌரம் எனப்படும்.

## பலர் போற்றும் பகலவன்

“ஆதித்யம் அம்பிகாம் விஷ்ணும் கணநாதம் மகேச்வரம்” என்று வரும் ஸ்லோகத்தில் ஆதித்யம் என்று பகலவனே முதலில் வைத்து வணங்கப்படுகிறது. உலக இயக்கங்களுக்கும், ஆரம்பங்களுக்கும் ஆதிபுருஷனாக, ஆதிகாரணமாக விளங்குபவன் இந்த ஆதித்ய தேவனே. சூரியன் இன்றி இவ்வுலகில் எதுவும் இயங்க முடியாது. ஆகவே அவன் காலையில் எழுந்து, மாலையில் மறை

யும் வரை கதிர்கள் பரப்பி கடாக்ஷிக்கிறுன். ஆதலின், ஒருவிதத்தில் அவன் காக்கும் தெய்வமான பகவான் ஸ்ரீவிஷ்ணுவே.

நம: ஸவித்ரே ஜகதேக சக்ஷுஷே!
ஜகத் ப்ரஸுதி ஸ்திதி நாச ஹேதவே
த்ரியீமயாய த்ரிகுணத்மதாரிணே
விரிஞ்சி நாராயண சங்கராத்மனே!

என்று சந்தியாவந்தனம் செய்யும் போது ஸூர்ய தேவனையே வழிபடுகின்றேம்.

'ந காயத்ரியா பரம் ஜப்யம்.' மந்திரங்களில் சிறந்தது காயத்ரியேயாகும். இந்த காயத்ரியும் சூரிய உபாசனையின் சிறப்பையே பேசுகிறது. காயத்ரியின் அந்தர் தேவதா ஸ்வரூபியான "ஸவித்ரு" என்ற சூரிய தேவனின் திவ்ய ஜோதியே தியானம் செய்யப்படுகிறது.

கோசலையின் மைந்தனான, சூர்யகுல சிரேஷ்டனான ஸ்ரீராமபிரான்கூட சூரியதேவனை வணங்கிப்போற்றுகின்ருர் என்ருல் சூரிய உபாசனையின் பழம்பெருமை நமக்குப் புலனாகிறது. தவசிரேஷ்டரான அகத்திய மாமுனிவர் "ஆதித்ய ஹ்ருதயம்" என்ற சூரியனை வழிபடும் பரம பவித்ரமான தோத்திரத்தை ஸ்ரீராமனுக்கு உபதேசித்து ராவணனை வதைக்க உதவினார் என்பது ராமாயணம் நமக்கு காட்டும் சான்ருகும். "ஸூர்ய ஆத்மா ஜகதஸ் தஸ்து ஷஸ்ச" அந்த சூரியனே தாவர ஜங்கமப்பொருள் அனைத்திற்கும் ஆத்மாவாகத் திகழ்கிருர்.

ரிக்வேதத்தில்,

ஹம்ஸ: சுசிஷத், வஸு,
அந்தரிக்ஷாஸத்
ஹோதா, வேதாஷத்; அதிதிர்
துரோண ஸத்;
ந்ருஸத், வரஸத்; ரிதஸத்;
வ்யோமஸத்
அப்ஜா கோஜா ரித்ஜா
அத்ரிஜா ரிதம் ப்ருஹ

'ஒளியில் மிதக்கும் அன்னம் (ஹம்சம்)' நீண்ட வானிடை விளங்கும் தலைவன், வேத விஜயன் ஹோதா, வீட்டின் விருந்தாளி, மனிதரிடை வாழ்வோன், சிறப்புடைய பேறுகளை பெற்றவன், உண்மை வடிவினன், ஒளி மயமானவன், வெற்பன், அறவோன்' என்றெல்லாம் சூரிய பகவான் போற்றப் படுகின்ருன்.

தமிழில் ராமாயண காவியம் தீட்டிய கம்ப நாட்டாழ்வாரும்,

"ஒன்றென உலகிடை உலாவு
மீமிசை
நின்று நின்று உயிர்தொறும்
நெடிது காக்குமே"

என்றும்,

"விரிகதிர் பரப்பி உலகமுழுதும்
ஆண்ட
ஒரு தனித் திகிரி"

என்று இளங்கோ அடிகளும் பாராட்டுகின்றனர்.

இப்படிப் பல்லோர் போற்றும் சூரியனை பாரததேச மக்கள் மட்டுமின்றி உலகோர் அனைவரும் போற்றுகின்றனர். ஒரிஸ்ஸாவில் கோனார்க் என்ற இடத்தில் கலிங்க மன்னர்கள் கட்டியுள்ள சூரியனார் கோவில் அழகும், கம்பீரமும் உடையது. தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருவிடைமருதூர் அருகே சூரியனார் கோவில் சூரிய வழிபாட்டிற்கே உரிய தனிக்கோவிலாகும். ஜெய்பூரில் காலவ முனி ஆச்ரமத்தில் இன்றும் மலை மீது சூரியனுக்குக் கோயில் இருக்கிறது.

## புராணத்தில் சூரியன்

வேத உபநிஷதங்களிலே பல இடங்களில் சூரியன் முக்ய இடத்தைப் பெற்றுள்ளான். கச்யபரின் மனைவிக்கு ஏழு பிள்ளைகள் என்றும், எட்டாவது பிள்ளையான சூரியனே மஹா மேருவை சுற்றி வருகிருன் என்றும் புராணம் கூறுகிறது. ஸ்வர்ணன், சரண்யு, உறஸ் என்ற திவ்யமான பெயர்களை ரிக்வேதம் இந்த சூரியனுக்குச் சூட்டியுள்ளது.

சூரியன் 12 மாதங்களில் 12 அம்சங்களில் உலகுக்கு அருள் புரிகின்ருன்.

(1) விவஸ்வான் (2) அர்யமா (3) பூஷா (4) த்வஷ்டர் (5) ஸவிதா (6) பகன் (7) தாதா (8) விதாதா (9) வருணன் (10) சுக்கரன் (11) உருக்கிரமன் (12) சூரியன்.

சூரிய உபாஸனையை பவிஷ்ய புராணம், பிரம்ம புராணம், வராக புராணம், மத்ஸ்ய புராணம், அக்னி புராணம், கருட புராணம், பவிஷ்யோத்தர புராணம், காளிகா புராணம், மார்க்கண்டேய புராணம் ஆகிய பல பழம் பெரும் நூல்கள் விஸ்தாரமாக விவரித்துள்ளன. வராஹமிஹிரரின் "ப்ருஹத் ஸம்ஹிதை" பாரத மக்கள் போற்றும் பழம்பெரும் நூல். இதில் சூரிய தேவனைப் பற்றிய வரலாறு காணப்படுகிறது.

சூரிய உபாஸனை நோய்கள் நீங்க பெரிதும் உதவும் என்பதை மருத்துவ நிபுணர்கள் கூட ஒப்புக்கொண்டுள்ளனர். காஞ்சி நகரில் மயூர கவி 'சூர்யசதகம்' பாடி நல்ல பார்வை பெற்றதாகக் கூறப்படுகிறது. அவர் அருளிய சூர்ய சதகத்தை முறைப்படி பாராய

ணம் செய்தால் நேத்ர ரோகங்கள் நீங்கி குணம் பெறலாம் என்பது ஐதீகம்.

வேதம் தவிர ஆதியஹ்ருதயம், மயூர கவியின் சூர்ய சதகம், ஸாம்ப பஞ்சாசிகா ஸ்தோத்ரம், அப்பய்ய திக்ஷிதரின் ஆதித்ய ஸ்தோத்ர ரத்னம், தீக்ஷிதரின் சூர்யதேவ கிருதிகள் சிறந்த வடமொழி நூல்களாகும்

ரிக் வேதத்தில் சூர்யனின் பல்வேறு முகங்களாக நிஷாத் காலம், உஷத் காலம், சாயா காலம், சந்தியா காலம், சவித்ரா காலம் என்ற ஐந்து வகை வழிபாடுகள் கூறப்படுகின்றன. தீக்ஷதரின் ஸௌர்ய மூர்த்தே என்ற கிருதியில் சூரியனின் கருணை லீலைகள் விளக்கப் படுகின்றன.

ஆக, நமது முன்னோர் சூரிய தேவனை மட்டுமின்றி, விநாயகர், முருகன், சக்தி, சிவன், விஷ்ணு ஆகிய தேவர்களையும் தத்தம் மனோ கல்பனைக்கு ஏற்ற விதத்தில் வடித்து வணங்கி வந்திருக்கிறார்கள். தெய்வம் ஒன்று தான். அவன் பலவாறாகக் காட்சி தருகிறான். வேண்டியவர்க்கு வேண்டியவரங்களை ஈகும் அந்தப் பரம்பொருளை நாம் எந்த வடிவில் வேண்டுமானாலும் வணங்கி அருள் பெறலாம்.



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

(உமைபிரியன்)

## எட்டாம் அத்தியாயம்

## அக்ஷரப்ரஹ்ம யோகம்

### அர்ச்சுனன் கூறியது :

கிம் தத்ப்ரஹ்ம கிமத்யாத்மம் கிம்
கர்ம புருஷோத்தம ।
அதிபூதம் ச கிம் ப்ரோக்தமதிதைவம்
கிமுச்யதே ।। (1)

"ஓ புருஷோத்தமனே! பிரம்மம் என்று அழைக்கப்பெறுவது எது? அத்யாத்மம், கர்மம் எனப்படுபவை எவை? அதிபூதம் என்று அழைக்கப்பெறுவது எது? அதிதெய்வம் என்பது எது?"

[அர்ச்சுனனின் ஐயக் கேள்விகள் தொடருகின்றன.]

அதியக்ஞ: கதம் கோஅத்ர
தேஹே அஸ்மின் மதுஸூதன ।
ப்ரயாணகாலே ச கதம்
ஞேயோஅஸி நியதாத்மபி: ।। (2)

"மதுசூதனா! இந்த உடலில் அதியக்ஞன் என்பவன் யார்? அவன் எப்படி இருப்பான்? கட்டுப்பாட்டினைப் பெற்றவர்கள் தங்கள் மரணக் காலத்தில் உன்னை எவ்வாறு அறிந்துகொள்கிறார்கள்."

[இந்த ஒன்றிரண்டு செய்யுட்களில் வரும் ஏழு சொற்களும் பொருள் பொதிந்தனவாகும். கிருஷ்ணன் குறிப்பிட்ட அந்த ஏழு சொற்களின் பொருளையே இந்தச் செய்யுட்களில் அர்ச்சுனன் கேட்கின்றான்.]

### பகவான் கூறுவது :

அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோ
அத்யாத்ம முச்யதே ।
பூதபாவோத்பவகரோ விஸர்க:
கர்மஸம்ஞித: ।। (3)

"அழிவில்லாததும், மிகச்சிறந்ததாகவும் இருப்பது பிரம்மமாகும். அதனுடைய இயல்பானது அத்யாத்மம் என்று கூறப்படுகிறது. உயர்களைப் படைத்து, அவற்றை இயக்கும்படியான வேள்வியாகிய வினையே கர்மம் என்று அழைக்கப்படுகிறது."

[எல்லா உயிர்களுக்கும் காரணமாக இருப்பது பிரம்மம் என்பதாகும். அப்பிரம்மம் ஐம்புலன்களுக்குக் கட்டுப்படாதது. காலத்தைக் கடந்தது. அண்டங்கள் எல்லாவற்றிற்கும் அப்பிரம்மம் இருப்பிடமாக இருப்பதால் அது பரப்பிரம்மம் என்று அழைக்கப்படுகிறது. அதுவே முழுமூலப்பொருளாகும். ஒவ்வொரு உயிர்க்கும் அதற்கென்ற



இயல்புகள் உண்டு. அதனை சுபாவம் என்று கூறுவர். அந்த பரப்பிரம்மத்திற்கு அதற்கென ஓர் இயல்பு உண்டு. அதாவது, அப்பரபிரம்மம் பல உயிர்களைத் தன்னை வெளிப்படுத்திக்கொள் ளும் இயல்பைக் கொண்ட தாக அமைந்துள்ளது. அந்த இயல்புக்கு அத்யாதமம என்று பெயர். கடலில் அலைகள் எவ்வாறு ஒடுங்கி விடுகின்ற னவோ அவ்வாறு ஜீவாத் மாக்கள் (எனும் அலைகள்) பரப்பிரம்மத்துடன் (கடலுடன்) ஒடுங்கி விடுகின்றன. ஒருவனு டைய உயர்ச்சிக்குக்காரணம் அவன் புரியும் செயல்பாடுக ளான வினைகளாகும். அந்த நல்வினைகளே 'கர்மம்' என்ற ழைக்கப்படுகின்றன.]

அதிபூதம் க்ஷரோ பாவ:
புருஷஸ்சாதிதைவதம் ।
அதியக்ஞோ அஹமேவாத்ர
தேஹேப்ருதாம் வர ।। (4)

"மனிதர்களுள் உயர்ந்தவனே! அழிகின்ற பொருள் அதிபூதம் என்று கூறப்படுகிறது. புரு ஷன் எனப்படுபவன் அதிதெய் வமாகின்றான். இனிமேல் நான் தான் இங்கு உடம்பினுள் அதி யக்ஞமாக விளங்குவேன்."

[இங்கு அதிபூதம், புருஷன், அதிதெய்வம், அதியக்ஞம் எனும் நான்கு சொற்கள் பயன்படுத தப்பட்டுள்ளன. இதில் அதி பூதம் என்பது அழிந்துவிடக் கூடிய இந்த உடல்களாகும். புருஷன் என்பவன் இந்த உல கமனைத்தையும் தன்னுடைய இருப்பிடமாகக்கொண்டு எங்கும் எதிலும் நீக்கமற நிறைந்திருப் பவனாவான். அதிதெய்வம் எனப்படுபவன், இந்த உயிர் கள் யாவற்றிற்கும் உடலைக் கொடுத்த பிரம்மதேவனாவான். இறுதியாகக் கூறப்படுவது அதி யக்ஞமாகும். யாகம் என்று அழைக்கப்பெறும் வேள்விக் குச் சிறப்பு அதில் சொரியப் படும் பொருள்களையும் சார்ந் துள்ளது. அலைபாயும் அவ் விறைவனுக்கே கொடுக்கப்படு கின்றன. அதுபோது, அவ் வேள்வியில் வேள்வி செய்ப வன் தன்னையே ஒரு பொரு ளாகச் சொரியும் போது, அந்த வேள்வியே ஒரு புனிதமாகிறது. ஆம் ஜீவன் தன்னையே அப்ப ரமனுக்கு அளித்துவிடுகிறது. அதுவே ஜீவ பரம ஐக்யமா கும். அங்கு ஜீவன் இயல்பு மறைந்து பரபோதம் ஒளிர் கின்றது. அந்த ஒளிரும் சூழ் நிலையில் தெய்வாம்சம் பிரதி பலிக்கின்றது. இதனை ஏற்ப டுத்தும் ஒரு யக்ஞமே அதியக் ஞமாகிறது.]

அந்தகாலே ச மாமேவ ஸ்மரன்
முக்த்வா கலேவரம்! ।
ய: ப்ரயாதி ஸ மத்பாவம் யாதி
நாஸ்த்யத்ர ஸம்சய: ।। (5)

"இறக்கும் தருணத்தில் என் னையே நினைத்துக்கொண்டு உடலைவிட்டு, யார் ஒரு வன் செல்கின்றானோ, அவன் என் உருவத்தை அடைகின்றான். இதில் சிறிதும் ஐயமில்லை."

[இன்றையக் காலக்கட்டத்தில் சராசரி ஒரு மனிதன் தனது 50வது வயது வரை, தன் இன்பம், தன் வாழ்க்கை, தன் குடும்பம், என்று அதற்காக நாளும் பலவாறு உழைக் கின்றான். ஆனால் எது உண்மையான இன்பம், எது நிலைத்த உறவு என்பதைத் தன் வாழ்நாளின் இறுதிக் கட் டத்திலே தான் நினைக்கத்த லைப்படுகின்றான். உடலும், உள்ளமும் சோர்வுற்ற நிலை யில்தான் இறைவனைப்பற்றி நினைக்கின்றான். அது அவ னுடைய மரண பயத்தின் எதி ரொலிதான். இவ்வொலியினை அவன் தவிர்க்க வேண்டுமா யின் இறைநினைப்பு அவனு டைய வாழ்க்கையின் ஒருபகு தியாக இருந்திட வேண்டும். தனது இறுதிக்காலத்திலாவது அவன் அந்த பக்தி உணர் வினை வளர்த்துக் கொள்ள வேண்டும். இந்தப் பக்தி உணர் வினை இறை நாமாக்களைக் கூறுவதாலேயே ஒருவன் பெற முடியும். ஆகையால்தான் தான் பெண் இன்பத்தில் திளைத்து நோயுற்றுத் துடித்த 'அஜாமி ளன்' தன் உயிர் பிரியும்போது 'நாராயணா' என்று இறைவன் பெயர் கொண்ட தன் மகனை அழைத்ததால் அஜாமிளன் உயர்கதி பெற்றதாக புராணம் கூறும்.

ஆம் மரணக்காலத்தில் ஒரு வனுக்குள் ஏற்படும் இறை நினைப்பு, அவனை இறை வனோடு கலந்துவிடச்செய்கின் றது என்பதற்கு இங்கு பகவான் உறுதி அளிக்கின்றான்.]

யம் யம் வாபி ஸ்ரமன்பாவம்
த்யஜத்யந்தே கலேவரம ।
தம் தமேனவைதி கௌந்தேய ஸதா
தத்பாவபாவித: ।। (6)

"குந்தியின் மகனே! மர ணமாகிய கடைசிக்காலத்தில், மனதில் எதை நினைத்துக் கொண்டு இந்த உடலை ஒரு வன் விடுகின்றானோ, எப் போதும் அதனையே நினைத் துக் கொண்டு இருப்பவனா கிய அவன், அதனையே (அப் பொருளையே) அடைகின்றான்."

[சிறு வயதில் ஒருவன் தான் எதிர்காலத்தில் ஒரு சிறந்த பொறியாளனாகவோ, சிறந்த மருத்துவனாகவோ, வழக்கறிஞ ராகவோ ஆக வேண்டும் என்று

நினைத்துக்கொள்ளும் போது, அவன் தன் முயற்சியில் வெற்றியடையலாம். அவ்வாறு அவன் வெற்றியடையாத தருணத்து, அவன் தான் சாகும் தருவாயினும் அந்த நினைவே அவன் உள்ளத்தில் ஒரு சில கணங்கள் நிழலாடுகின்றது. ஏன் எனின், அந்த நினைப்பு, அந்த வெறி அவன் மனதில் ஆழமாக பதிந்து விட்டதால். ஆகவே ஒருவனது ஆசை ஏமாற்றமாக நின்று விட்டநிலையில் அவ்வாசை அவனது அடுத்தப்பிறவியிலும் தொடரலாம் என்பது இங்குச் சுட்டிக்காட்டப்படுகிறது.]

*தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு*
*மாமனுஸ்மர யுத்ய ச ।*
*மய்யர்பித மனோபுத்திர்*
*மாமேவைஷ்யஸ்யஸம்சய: ।। (7)*

"ஆகவே, எப்பொழுதும் என்னையே நினைத்துக்கொண்டு போர் புரிவாயாக. மனத்தையும் அறிவையும் என்னிடம் முழுமையாக ஒப்படைத்துவிடுவதால் சிறிதும் ஐயமில்லாமல் நீ என்னையே சேர்வாய்"

[இங்கு இறைவன் அர்ச்சுனன் வாயிலாக, உலக மக்களுக்கு ஓர் உண்மையை உணர்த்துகின்றார். போர் செய்வது அர்ச்சுனனுடைய குலப்பெருமை. அதுவும் அந்தச் சூழ்நிலையில் போர் செய்வது என்பது நடந்தாக வேண்டும். அது அங்கு அரச்சுனனுடைய முதல் கடமையாகும். ஆகவே, அவரவர்கள் அவரவர்களுக்குரிய கடமையை ஆற்றுவதே சிறந்த தர்மம் எனறு இங்கு வலியுறுத்தப்படுகிறது. சிலர் பஜனை என்ற பெயரில் விட்டில் தடபுடலாக, கடன்வாங்கியும் பூஜைகள், பிரஸாதங்கள் என்று செய்வர். அதே நேரத்து, குடும்பச் சூழ்நிலை, மனைவி, மக்கள் நிலைகளையும் மறந்துவிடுவர். ஏன், தங்கள் தொழிலையே மறந்துவிடுவர். அதே போன்று ஒருசிலர் தங்கள் குடும்பத்தின் பெயரில் காட்டும் அளவற்ற ஈடுபாட்டினால் கடவுள் நினைப்பே மறநது விடுகின்றனர். இரண்டு நிலைகளும் தவறு. ஆம், தங்களுக்கு இடப்பட்ட, தாங்கள் மேற்கொண்ட வினைகளை ஆற்றிக்கொண்டே இறைசிந்தனையையும் மனதில் வளர்த்துக்கொள்ள வேண்டும். இந்த இரண்டு நிலைதான் ஒருவனை உயர்த்தக்கூடிய சிறந்த சாதனமாகும்.]

*அப்யாஸயோகயுக்தேன சேதஸா*
*நான்யகாமினா ।*
*பரமம் புருஷம் திவ்யம் யாதி*
*பார்த்தானுசிந்தயன் ।। (8)*

"பார்த்தா! மற்றைய விஷயங்களிலே (மனத்தைச்) செலுத்தாது, பயிற்சி எனும் யோகத்துடன் கூடிய அறிவால், பேரொளிமயமான அப்பரம்பொருளை நினைப்பவன் அப்பரமனையே அடைகின்றான்."

[மாணவனுக்குப் படிப்பது ஒருபயிற்சியாகும். விளையாட்டு வீரனுக்கு விளையாடுவது ஒரு பயிற்சியாகும். இந்த பயிற்சியே ஒரு யோகமாக அவர்கள் மேற்கொள்ளும் போது, அவர்கள் ஊண், உறக்கம் மறந்து விடுகின்றனர். தேர்வே, போட்டியே அவரகளது இலககாக அமைந்து விடுகிறது. இது போன்று, பக்தனானவன் தான் வழிபடும் கடவுளை நாளும் வழிபடும்போது, நாளடைவில் தன்னை, தன் உடலை மறந்தவனாகின்றான். அந்த நிலையில் மரணத்தின் இறுதிநிலை அவனை எந்த அளவிலும் பாதிக்காது.]

*கவிம் புராணமனுசாஸிதார*
*மனோரணீயாம்ஸ மனுஸ்மரேத்ய:*
*ஸர்வஸ்ய தாதாரமசிந்த்யரூப*
*மாதித்யவர்ணம் தமஸ:*
*பரஸ்தாத் ।। (9)*

*ப்ரயாணகாலே மனஸா அசலேன*
*பக்த்யாயுக்தோ யோகபலேன சைவ।*
*ப்ருவோர்மத்யே ப்ராணமாவேச்ய*
*ஸம்யக் ஸ தம் பரம் புருஷமுபைதி*
*திவ்யம் ।। (10)*

"எல்லாம் தெரிந்தவனும், பழமையானவனும், எல்லாவற்றையும் ஆட்சி புரிபவனும், அணுவை விட மிகச் சிறியதாக இருப்பவனும், எல்லாவற்றையும் தாங்குபவனும், கருத்துக்கும் அறிவுக்கும் எட்டாத உருவத்தை உடையவனும், சூரியனைப்போன்று ஒளிபடைத்தவனும், அறியாமை எனும் இருட்டைக்கடந்தவனும் ஆகிய அந்த மூலப்பொருளான இறைவனை, பக்தியுடன், உறுதியான உள்ளத்துடன், யோகமெனும் ஆற்றலுடன் தன் உயிரைத் தன் புருவ நெற்றியின்நடுவில் ஒருமுகமாக இருத்தி யாரொருவன் தன்னுடைய மரணக் காலத்தில் தியானிக்கின்றானோ, அவன் அந்த மூலப்பொருளையே சென்றடைகின்றான்."

[மேற்கூறிய இரண்டு செய்யுட்களில் இறைவனின் எட்டு வித குணங்கள் கூறப்பட்டுள்ளன. அதனால்தான் இறைவன் 'எண்குணத்தான்' என்று பக்தர்களால் அழைககப்பெறுகின்றான். அத்தகு பெருமை மிகு இறைவனை ஒருவன் தன் சிறந்த பக்தி எனும் தூய அன்பின் மூலமாகவும், சிறிதும் கலங்காத, களங்கம் கொள்ளாத உள்ளத்தின் மூலமாக

வும், பயிற்சியினை ஒருமுனைப்போடு மேற்கொள்ளும்படியான யோகமெனப்படும் ஆத்ம பலத்தின் மூலமாகவும் இறைவனை அடையவேண்டும் என்று இங்கு அறிவுறுத்தப்படுகிறது. சாதாரணமானவர்களுக்கு உயிரானது அவர்களது உடம்பிலுள்ள 9 ஓட்டைகளில் ஏதாவது ஒன்றின் வழியாக வெளியேறுமாம்.

ஆனால் ஞானிகளுக்கு, உச்சந்தலையில் உள்ள 'பிரம்மாந்திரம்' எனும் உச்சி மண்டை வழியாக வெளியேறுமாம். அவ்வழியே புனிதமுக்திக்கு இட்டுச் செல்லுமாம்.]

(தொடரும்)

## கோயில் வருமானம்

புத்தாண்டு முதல் நாளான 1-1-95 அன்று திருமலைக்கோயில் வருமானம் ரூ. 52,54,871-00 ஆகும். இத்தொகையில் கோயில் உண்டி வருமானம் ரூ. 38,72,478, ஆர்ஜித உத்ஸவங்களால் பெற்ற வருமானம் ரூ. 10,33,000, லட்டு வடை பிரஸாத விற்பனை வருமானம் ரூ. 3,49,000 ஆகியன அடங்கும். இதுதவிர பல்வேறு மதிப்புள்ள நாணங்களைக் கொண்ட 131 மூட்டைகள் உள்ளன. இவற்றின் மதிப்பு சுமாராக ஐந்து லட்சம் இருககும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. சென்ற ஆண்டு புத்தாண்டுநாள வருமா்னம் ரூ. 45,88,995 ஆகும். சுமார் 1,20,000 யாத்திரிகர்கள் இவ்வாண்டு முதல்நாளன்று திருமலைக்கு வருகைபுரிந்து, இறைவனைத் தரிசித்தனர்.

* * *

## பாண்டிமா தேவி

கண்ணனைப் பெற்ற புண்ணியவதி தேவகி அன்னை. கண்ணனுக்குப் பாலூட்டி வளர்த்த பாக்யவதி யசோதை. அன்னை நஞ்சு கலந்த பாலூட்டிய பாதகி பூதனை என்னும் அரக்கி. நஞ்சு கலந்த அவள் அளித்த பாலுடன் அவள் உயிரையும் குடித்தான் (கண்ணன்). பாலூட்டியக் காரணத்தால் அரக்கி கண்ணனுக்கு அன்னையானாள். இவ்வகையில் கண்ணனுக்கு அமைந்த தாயார்கள் மூவர்.

இவ்வாறே சைவத்துறையில் புகழ் கொண்ட நால்வரில் முதல்வராய் விளங்கும் திருஞான சம்பந்தப் பெருமானுக்கும் தாயார்கள் மூவர் அமைந்தார்கள்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இதுபற்றி கேள்வி ஒன்று தொடுக்கிறுர். விடையும் அவரே கொடுக்கிறுர். திருஞான சம்பந்தரைப் பெற்றெடுத்த தாய் பகவதியம்மையாரைப் பற்றி சுவாமிகள் தமது கேள்வியில் பேசவில்லை. தாயை தராசில் வைத்து எடைபோடுவது கூடாது அல்லவா? சுவாமிகள் தொடுத்த கேள்வி இது.

"திருஞான சம்பந்தப்பெருமானே! தேவரீர் அன்புத் தாயார்கள் இருவரில் உயர்ந்தவர் யார்? சீகாழி தோணியப்பர் கோயில் திருக்குளக்கரையில் தேவரீர் குழந்தைப்பருவத்தில் ஒருநாள் பசியால் வாடி பாலுக்கு அழுதபோது தம் திருமுலையில் பால்சுரந்ததளித்த உமாதேவியாரா? அல்லது அந்நிகழ்ச்சியைப் பற்றி காதால் கேட்டபோது கேட்ட அக்கணமே தன்னையறியாமலேயே திருமுலை சுரந்த மதுரை மாநகர் அரசி பாண்டிமாதேவியாரா?"

திருஞான சம்பந்தக் குழந்தை சீகாழி கோயில் குளக்கரையில் அழுது நின்ற போது, அதைக் கண்ணுல் கண்டபின்னர் - 'குழந்தைக்குப் பால் கொடு' என்று இறைவன் கூறிய பின்னர் இறைவி அக்குழந்தைக்குப் பால் ஊட்டினாள். பால் நினைந்தூட்டும் தாய்" - மாணிக்கவாசகரின் வாசகம் இது. இதுதானே அன்புத்தாயின் அடையாளம்?

மதுரை அரண்மனை முற்றத்தில் சைவ சமய சொற்பொழிவாளர் ஒருவர் திருஞானசம்பந்தரின் வாழ்க்கை வரலாற்றைக்கூறி வந்தார். அதை ஆவலுடன் கேட்டு வந்த பாண்டிமாதேவியார், ஞானசம்பந்தக்குழந்தை குளக்கரையில் அழுது கொண்டிருந்த நிகழ்ச்சியினை சொற்பொழிவாளர் அகம் கனிய கூறி வருகையில் அக்கணமே தன்னையறியாமலேயே திருமுலை சுரந்தார். பாலைப் பொழிந்தார். ஆ! இவர் அல்லவா உயர்ந்த தாய்!

"இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்னின் - நிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தாள் ஆர் சொல் எனக்கு"

---சிவப்பிரகாச சுவாமிகள்

தகவல் : ஆர். சுப்பாராவ்-திருக்கோவலூர்.

# கடவுள் யார்?

திரு. த. உமாகாந்தன் - மதுரை

இக்கேள்வி பலகாலமாகவே கேட்கப்பட்டும், பல்வேறு பதில்களும் பல ஆன்மீகிகளால் அளிக்கப்பட்டும் வருகின்றன. மனிதன் நான்கு விதமான குறைபாடுகள் உடையவன். அதாவது பெரும்பாலும் மதி மயங்கி உள்ளவன். குறைவான புலன்களை உடையவன். பிறரை ஏய்க்கும் தன்மை உடையவன். மற்றும் நிச்சயமாக தவறு செய்பவன். இக்குறைபாடுகளுடன் இக்கேள்விக்கு விடை காண்பது சற்று கடினம்.

நான்மறைகள், வேதாந்த சூத்திரம், இதிகாசங்கள், புராணங்கள், உபநிஷத்துக்கள், ஸ்ரீமத் பாகவதம், ப்ரம்ம சூத்திரம் மற்றும் பகவத் கீதை இவற்றை நம்பிக்கையுடன் கற்றறிந்தால் இக்கேள்விக்கு விடை கிடைக்கும். இவைகளில் மொத்த சாராம்சமாக இக்கட்டுரை அமைகிறது.

கடவுள் அல்லது பகவான் எனப்படுபவர் ஆறுவகையான செல்வங்களை உடையவர். "பக" என்றால் செல்வம். "வான்" என்றால் உடையவர் என்று பொருள். ஆறுவகையான செல்வங்கள் முறையே ஈடில்லா அழகு, அறிவு, வலிமை, செல்வம், புகழ் மற்றும் துறவு. வேதாந்த சூத்திரத்தில் கடவுள் யார் என்ற கேள்விக்கு "ஜன்மாதியஸ்ய யத:" என்று கூறப்பட்டுள்ளது. அதாவது கால காலமாக எல்லாம் யாரிடமிருந்து துவங்குகிறதோ அவரே கடவுள் என்று பதில் அளிக்கப்பட்டுள்ளது.

பலர் பலவிதமான வடிவங்களிலும், உருவமற்றவராகவும் கடவுளை வணங்குகின்றனர். ஆனால் மூலம் ஒருவரே. மூன்று விதங்கள் (1) முழு முதற்கடவுளான உருவமுள்ள பரம்பொருள் (2) எங்கு நிறைந்துள்ள தோன்றாத அருவபிரம்



மம் (3) எல்லாவற்றிலும் எல்லா உயிர்களிலும் உள்ளுறையும் பரமாத்மா. ப்ரம்ம சம்ஹிதையில்,

"வேதம் ஏகோ தேவோ நித்ய-
லீலானுரக்தோ
பக்த வ்யாபி ஹ்ருத்யந்தராத்மா

அதாவது ஒரே முழுமுதற் கடவுள் தனது களங்கமற்ற பக்தர்களுடன் உறவு கொண்டு பற்பல உன்னத ரூபங்களில் லீலை புரிகின்றார் என்று கூறப்பட்டுள்ளது.

நமது மகான்கள் கடவுளை எவ்வாறு நினைத்து, விரும்பி, காண யோகம் புரிந்தார்களோ அவர்கள் விரும்பிய உருவங்களிலோ அல்லது அருவபிரம்மமாகவோ தோற்றமளித்திருக்கிறார் கடவுள்.

பல கடவுள் கொள்கை என்ற கேள்விக்கு, இந்த பிரபஞ்சத்தில் ஒருசாதாரண அணுவில் இருந்து மிக உயர்ந்த பிரம்ம லோகம் வரை எந்தப் பொருட்களும் ஒரே போல் உள்ளும் புறமும் இல்லை. தோன்றாதது என்று கூறப்படும் முக்குணங்கள் கூட ஒவ்வொரு உயிரிலும் தனக்கே உரித்தான வேறுபட்ட முறையில்தான் வெளிப்படுத்தப்படுகின்றன. எதுவுமே ஒரே போல் இல்லை. எல்லாமே மாறுபாட்டுடன்தான் காணப்படுகின்றன. இந்நிலையில் உள்ள உயிர்வாழிகளால் குறிப்பிட்ட ஒரே உருவத்தில் கடவுளை வணங்க இயலாது. மேலும் ஒரு பொருளைப் பற்றி முழுமையாக அறிய அது சம்பந்தப்பட்ட பல்வேறு பொருள்கள் பற்றிய அறிவு தேவை. எனவேதான் தூய பக்தர்களின் விருப்பத்திற்கேற்ப கடவுள் உருவத்துடனும், உருவமற்றும் தோன்றுகிறார்.

வேதங்களில்,

ஏகோவை நாராயண ஆஸீன்
ந ப்ரஹ்மா
ந ஈஷானோ, நாபோ நாக்னி
ஸமௌ நேமே
த்யாவாப்ருதிவி, ந நக்ஷத்ரானி
ந ஸுர்ய, ஸ ஏகாகீ ந
ரமதே தஸ்ய த்யானாந்த,
ஸ்தஸ்யயத்ர சாண்டோகை,
க்ரியமானாஷ்டகாதி ஸம்ஜ்ஏகா
ஸ்துதிஸ்தோம,
ஸ்தோமம் உச்யதே.

அதாவது படைப்பின் ஆரம்பத்தில் முழுமுதற்கடவுளான நாராயணர் மட்டுமே இருந்தார். பிரம்மனோ, சிவனோ, அக்னியோ, ஆகாயத்தில் சந்திரனோ, நட்சத்திரங்களோ, சூரியனோ இருக்கவில்லை. எல்லாவற்றையும் படைத்து எல்லாவற்றையும் அனுபவிக்கும் ஸ்ரீகிருஷ்ணர் மட்டுமே இருந்தார் என்று கூறப்பட்டுள்ளது.

மீண்டும் அதர்வ வேதத்தில்;

**நாராயனாத் ப்ரஹ்மா ஜாயதே,**
**நாராயனாத் ப்ரஜாபதி, ப்ரஜாய்தே,**
**நாராயனாத் இந்திரோ ஜாயதே**
**நாராயனாத் அஷ்டௌவஸவோ ஜாயந்தே,**
**நாராயனாத் ஏகாதச ருத்ரா ஜாயந்தே,**
**நாராயனாத் த்வாதஷாதித்யா**

அதாவது நாராயனரிடமிருந்தே ப்ரஹ்மா பிறக்கிறார். நாராயனரிடமிருந்தே ப்ராஜாபதிகளும், இந்திரனும், எட்டு வசுக்களும், பதினொரு ருத்திரர்களும், பன்னிரெண்டு ஆதித்தியர்களும் பிறக்கின்றனர் என்று கூறப்பட்டுள்ளது.

இது வராஹ புராணத்தில்,

**நாராயண பரோதேவஸ், தஸ்மாஜ் ஜாதஷ் சதுர்முக;**
**தஸ்மாத் ருத்ரோ(அ) பவத்தேவ, ஸ சஸர்வஞ் ஏதாம்கத**

அதாவது நாராயணரே முழுமுதற்கடவுள், அவரிடமிருந்தே பிரம்மா பிறந்தார்.

பிரம்மாவிடமிருந்து சிவன் பிறந்தார் என இவ்வாறு உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

மேலும் மோக்ஷ தர்மத்தில்:

**ப்ரஜாபதிம் ச ருத்ரம் சாப்யஹம்**
**ஏவஸ்ருஜாமி வை தௌ ஹி மாம் நவிஜானீதோ**
**மம மாயா விமோஹிதௌ**

அதாவது ஜன அதிபர்களான சிவனும் மற்றவரும் என்னால் படைக்கப்படுகின்றனர். எனது மயக்க சக்தியால் கவரப்பட்டு இருப்பதால் அவர்கள் தாம் என்னால் படைக்கப்பட்டு இருப்பவர்கள் என்பதை புரியாமலிருக்கிறார்கள்.

விஷ்ணு புராணமும் இதை;

**யோ(அ)யம் தவாகதோ தேவ ஸமீபம்**
**தேவதா-கன; ஸத்வம் ஏவஜகத்-**
**ஸ்ரஷ்டாயத; ஸர்வகதோ பவான்**

'முழுமுதற்கடவுளே! ஸ்ரீகிருஷ்ணரே! யாரெல்லாம் உம் முன் வருகின்றனரோ, தேவராயினும் அவரெல்லாம் உங்களால் படைக்கப்பட்டவரே.'

ப்ரஹ்ம சம்ஹிதையும் 'இறைவன் ஸ்ரீகிருஷ்ணர் நூற்றுக்கணக்கான உருவங்களில் நித்தியமாக நிலை பெற்று இருக்கிறார். இவற்றில் முக்கியமானவர் இராமர், நரசிம்மர், நாராயணர் முதலானவர்' என்று கூறுகிறது.

அதர்வ வேதம் மேலும் இவ்வாறு கூறுகிறது;

**யோ ப்ரஹ்மானம் விதகாதி பூர்வம் யோவை**
**வேதாம்ஷ்ச காபயதிஸ்ம கிருஷ்ண**

அதாவது ஆதியிலே பிரம்மனுக்கு வேத ஞானத்தை உபதேசித்ததும் புராதன காலத்திலே வேத ஞானத்தை அளித்ததும் ஸ்ரீகிருஷ்ணரே.

ஸ்ரீமத் பாகவதமும், பிரஹ்ம சம்ஹிதையும்;

**"தம் அஹம் பஜாமி கோவிந்தம் ஆதி புருஷம்"**

என்று கூறுகின்றன.

அதர்வ வேதம்,

"ப்ரஹ்மன்யோ தேவகி-புத்ர"

தேவகியின் மைந்தனான ஸ்ரீகிருஷ்ணரே முழுமுதற்கடவுள் என்று கூறுகிறது. அதாவது இன்றிலிருந்து 5100 வருடங்களுக்கு முன்பு பூமிக்கு வந்த ஸ்ரீகிருஷ்ணரைப் பற்றி கூறுகிறது.

ஸ்ரீகிருஷ்ணரும் 'எல்லா இருப்புகளின் உற்பத்தி விதை நானே, அசைவன அசையாதனவற்றில் நானின்றி இருக்கக்கூடியது என்றும் இல்லை' (ப.கீதை 10:39) என்றும் கூறுகிறது. 'என்னுடைய ஒரு சிறு பின்னப் பகுதியால் இந்த பிரபஞ்சம் முழுவதையும் புகுந்து நான் தாங்குகின்றேன்' (ப.கீதை 10:42) என்றும் கூறுகிறார்.

**"வேதைஸ்ச ஸர்வைரஹமேவ வேத்ய"**

அதாவது வேதங்களில் கூறப்பட்ட எல்லா விஷயங்களும் இறுதி நோக்கமான ஸ்ரீகிருஷ்ணரைப் புரிந்து கொள்வதற்காகவே. ஸ்ரீகிருஷ்ணர் பிரம்மாவின் ஒரு தினத்தில் (மனித கணக்கின்படி 864 கோடி ஆண்டுகளில்) அதாவது எட்டாவது மனுவின், இருபத்தி எட்டாவது யுகத்தில், துவாபரயுகத்தில் இறுதியில் தாமே முறைப்படி நேரடியாக இப்பூமியில் தோன்றுகிறார். இதற்கு இடைப்பட்ட காலங்களில் தோன்றுபவர்கள் அவரது அவதாரங்களே.

ஸ்ரீகிருஷ்ணரும் அவரது அவதாரங்களும் தோன்றுவதற்கான காரணம்;

**யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத**
**அப்யுத்தான அதர்மஸ்ய தகாத்மானம் ஸ்ருஜாயஹம்**

அதாவது அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டவே (ப.கீதை 4.7)

எனவே முழுமுதற்கடவுள் "ஸ்ரீகிருஷ்ணர்" தான் என்பதை அனைத்து ஆன்மீக இலக்கியங்களும் உறுதி செய்கின்றன.



# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

திரு. மா. வரதராஜன் - திருப்பதி.

## ஏ

ஏக - போக

ஏக மூர்த்தி - நிகரற்ற மூர்த்தி

ஏகமாய் - ஏக-இருதயமாய்க் கொண்டு ஒருமிடறாய்

ஏகமெண்ணும் - ஒருபடிப்பட, எப்போதும் ஒக்க

ஏங்கல் - ஒலித்தல்; இரங்கல்; பயப்படல்; அழுதல்

ஏங்கியேங்கி - இளைத்து இளைத்து

ஏச்சு - ஏசுகை; பழிப்பு

ஏட்சி - எழுச்சி

ஏடலர் கண்ணி - ஏடு-தளம், அலர்-பூ; செவ்வியான மாலை

ஏடி - என்னடி; தோழி எல்லேயும் ஏடியும் தோழியை முன்னிலையாகச் சொல்லுதல்; ஏடியும் உண்டு. ஏண்டீ இதன் கொச்சை

ஏடு - இதழ்; மலர்; பொல்லாங்கு

ஏடீ - ஏடி என்றே பொருள்; தோழீ ஏடி சாந்து கொண்டுவா

ஏத்தடியவர் - தோத்திரம் பண்ணும் அடியவர்; ஏத்தும் அடியவர்

ஏத்தாளிகர் - வைதாளிகர்-வந்தி பாடுகிறவர்கள்; ஏத்தாளம் செயகிறான்-கேலி செய்கிறான் என்பது ஏத்தாளிகரின் கொச்சை

ஏதம் - குற்றம்; வருத்தம்

ஏநதல் - தேங்கல்; தாங்கல்

ஏதலர் - ஏசுகின்ற பகைவர்கள்

ஏது - யாது

ஏந்துநீரிளங் குருகு - நீருக்குப் பயபபடாதபடி அது, தானே தரிக்கும் படியாய இளமையான குருகு

ஏநதுபெருஞ் செல்வர் - அளவிலா பெருஞ்செல்வம் உடையவர்கள

ஏபாவம் - என்ன பாவமோ!

ஏமம் - காவல்; இரவு

ஏமாந்துபோகை - ஏமாறுகை

ஏயக்கும் - காட்டும்

ஏய்த்தல் - பொருந்தவிடுதல்

ஏய - ஏய்கை-ஒக்கை, பொருந்திருககை

ஏயான் - தகாதவன்

ஏயில் - இசை

ஏர் - கட்டளை, அழகு, கட்டழகு, கட்டுப்பாடு

ஏர்பு - எழுச்சி

ஏர்வு - ஒப்பு

ஏரண்டம் - ஆமணக்கு

ஏருழவர் - ஏரைநடத்தவல்ல உழவர்

ஏல் - பொருத்தம்; இப்படியாகில், விளியாகவும் வரும்

ஏலக்கோலி - முன்பே விசாரித்து

ஏலவார்குழல் - மணம் மிக்க குழல்

ஏலுந்திசை - ஏன்று கொண்டுபார்த்த திசை

ஏலுமறைப் பொருள் - மறைஏலும் பொருள்; தகுதியான வேதார்த்தம்

ஏவல்ல - எய்யவல்ல

ஏவல் - கட்டளை

ஏழ்படிகால் - ஏழுதலைமுறை

ஏழாட்கால் - தமக்குக்கீழே மூன்றும், மேலை மூன்றும், தாமுமாக ஏழுபடியைச் சொன்னபடி, கால்-பரம்பரை

ஏற்கவே - முன்பாகவே

ஏற்கும் - தகும்

ஏற்றக்ஷம - ஏறின விலை

ஏறவாங் குகை - விலகுகை

ஏற்றிலக்கை - அதிகச்சம்பளம்

ஏற்றச்சுருக்கம் - ஏற்றத்தாழ்வு

ஏறிட்டுக்கொள்ளுதல் - மேலே போட்டுக்கொள்ளுதல்

ஏருளுமிறையோன் - ஏற்றை எருத்தை வாகனமாக ஆளும் சிவன்

ஏறுண்டான் - அடிபட்டான். ஒருவன் ஒருவன் கையிலே அடிபட்டால் அவன் ஏறுண்டான் என்பர்

ஏறுதிருவுடையான் - நாள்செல்லச்செல்ல ஏறிவருகிற செல்வத்தை உடையவன்

ஏறே தரும் - நோவுபடுத்தும்; புண்படுத்தும். ஏறு-ஏறான (ருஷபம்) ஸர்வேச்வரனைத் தரும்.

ஏன்று கொண்டு - ஏறிட்டுக்கொண்டு

ஏனம் படிந்துழு-சால் - பன்றி உழுதசால்-குறவர்கள் தங்கள் முதிய வயதில் உழ மாட்டாது பன்றிகளை விட்டு அடித்து மிதித்து உழச்செய் வார்களாம்.

ஐவர் - பஞ்சபாண்டவர்கள்

ஐவர்தூதன் - பாண்டவதூதனான கண்ணன்

ஐவனம் - மலைச்சாரலில் விளையும் நெல்

(தொடரும்)

## ஐ

ஐ - அழகு; மென்மை; கோழை; அரசன்

ஐங்கணை வில்லி - ஐந்து பாணங்களை எய்யும் வில்லி, மன்மதன்

ஐங்கணையான் - காமன்; மன்மதன்

ஐங்கரன் - கணபதி

ஐங்கருவி கண்ட-இன்பம் - ஐந்து இந்திரியங்களாலும் அளவிட்டு அநுபவித்த இம்மை இன்பம்

ஐஞ்நூறு - ஐந்நூறு

ஐஞ்சீலம் - கற்பூரம்; ஏலம்; லவங்கம்

ஐசுகைசு - மிகவும் அல்பமான

ஐதுநொய்தாக - மிகவும் அற்பமாக

ஐம்படை - விஷ்ணுவின் பஞ்சாயுதம்

ஐம்பால் - ஐந்துவகையாக முடிக்கும் கூந்தல், அதாவது கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள் என்பன. கூந்தலின் ஐந்து தன்மைகளையும் கூறுவர். அதாவது, மென்மை, குளிர்ச்சி, நாற்றம், நெடுமை, கறுப்பு என்பனவாகும்.

ஐமார் - ஆணுடன் பிறந்தார், உடன் பிறந்த ஆண்கள்

ஐய - ஐயனே!

ஐயநா - மெல்லியநா

ஐயநுண்மணல் - ஐய-அழகு, ஐயதாய்-நுண்ணியதான மணல்

ஐயமார் - மூத்தவர்கள், முனிவர்கள்

ஐயறிவு - கண், மூக்கு முதலிய ஐந்து இந்திரியங்களின் அறிவு.

ஐயர் - முதலியார், ஏஜமானர், தகப்பனார்

ஐயர்தடுக்கு - ஆசிரியரின் வீடு, ஆஸநம் என்று பொருள்

ஐயர்மகன் - தசரதன் மகன்

ஐயரும் ஆச்சியும் - அப்பாவும் அம்மாவும்

ஐயன் - சாத்தன், ஸ்வாமி, அப்பன்

ஐயன்பாழி - சாஸ்தா கோவில்

ஐயோ! - ஆச்சரியச் சொல்

ஐயை - துர்க்கை; காளி; தலைவி

ஐராவதம் - இந்திரனின் யானைக்குப் பேர்

ஐவகைப்பொன் - பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம்-பஞ்சலோஹம்



## திருமலைக்கு நடந்து வரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள் :

* யாத்திரிகர்களின் சாமான்கள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி. தேவஸ்தான சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல்கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில் காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.
* காளி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்மசுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன.
* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன்வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.
* மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.
* திருமலைக்குச் செல்லும் வழியில் யாத்திரிகர்களை களவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, கூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல் இரவு நேர ரோந்து ஏற்பாடுகள் உண்டு.

# முதல் சித்தர் - திருமூலர்

திருமதி. G. கௌசல்யா - வேலூர்.

மனித குல மேன்மைக்காகப் பாடுபட்டவர்கள் சித்தர்கள். இவர்கள் பன்னூராயிரம் ஆண்டுகளுக்கு முன் பாரதம் முழுவதும் பரவியிருந்தனர். இன்றும் இருக்கின்றனர். சித்தர்களைப் பதினெண் சித்தர்கள் என்று கூறுவது மரபு. அகத்தியர், பாம்பாட்டி சித்தர், குதம்பைச் சித்தர் என சித்தர்களது எண்ணிக்கைப் பதினெட்டிற்குள் அடங்காது அதிகரிக்கின்றது. என்ன காரணம் கருதி 'பதினெண் சித்தர்கள்' என வரையறை செய்தனர் என்பதும் ஆய்வுக்குரியது.

இன்றையச் சமூகச் சூழலில் மனிதனின் சராசரி ஆயுள் 60 வயதில் இருந்து 80 வயதுக்குள் என வரையறை செய்துள்ளனர். திருமூலர் இவ்வெல்லைக்கு அப்பாற்பட்டு வாழ்ந்தவர் ஆவார். அவர் சுமார் மூவாயிரம் ஆண்டுகள் வாழ்ந்தவர். அவர் நம்மைப்போல் உடுப்பதும், உண்பதும், உறங்குவதும், கேளிக்கை விளையாட்டுக்களில் ஈடுபடுவதுமாகிய இவ்வாழ்வுக்கும், அதற்கான பொருளுக்கும் இரவு, பகல் பாராது அலைவதுமாகிய வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. அரசமரத்தடியில் கண்மூடி சிவனோடு ஒன்றுபட்டு அமர்ந்துவிட்டார். ஓராண்டுக்கு ஒருமுறை கண்விழிப்பார். ஒருபாடல் பாடுவார். பின் யோகத்தில் அமர்ந்து விடுவார். அதனால்தான் அவர் அத்தனை ஆண்டுகள் வாழ்ந்தனர் எனலாம்.

சித்துக்கள் புரியலாம், சிங்கம், யானை புலியை அடக்கலாம். ஆனால்

"சிந்தையை அடக்கிச் சும்மா
இருக்கும் திறமரிது"

என்கிறார் தாயுமானவர்.

மிருகங்களை அடக்குவதைக் காட்டிலும் மனதை அடக்குவது கடினமானச் செயல் என்று சித்தர்தம் வழியில் வந்த தாயுமானவரும் ஒப்புக்கொள்கின்றார். அத்தகைய மனதை அடக்கினார் திருமூலர். மனமடங்கினால் சித்தம் அடங்கும். பிராணன் உடலுக்குள் சுழன்று, சுழன்று இறுதியில் தலையினுள் சுற்றும். இத்தகைய சித்தத்தை அடக்கி வென்று சித்தரானார் திருமூலர். இவ்வாறு மனமடங்கி இறைப்பேறு பெற்றவரைத் தமிழ் இலக்கியங்கள்,

"சித்தமல மறுவித்துச் சிவமாக்கி
எனையாண்ட
அத்தனெனக் கருளியவாறூர்
பெறுவா ரச்சாவே"

"சித்தர் சிவத்தைக் கண்டவர்"

"பதமுத்தி மூன்றும் பழுதென்று
கைவிட்
டிதமுற்ற பாச இருளைத் துறந்து
மதமற் றெனதியான் மாற்றி
விட்டாங்கே
திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே"

"எழும்பாமல் வாசனையைக்
கொன்றவன் ஞானி
ஏகாமல் வாசனையை
யடித்தோன் சித்தன்"

"சாத்திரத்தைச் சுட்டு எரித்தால்
அவனே சித்தன்"

என்று விளக்குகின்றன.

சித்தத்தை வென்ற சித்தர்கள் சித்துவிளையாடியுள்ளனர். அவை இன்று நாம் தெரு ஓரங்களில் காணும் வித்தை காட்டுபவன் செய்யும் சித்துக்கள் போன்றவை அல்ல.

உயிர்க்குலம் மாயையில் சிக்கி உழலுதல் கண்டு வருந்தி அவை உய்வடையும் பொருட்டு சித்து விளையாடியவர்கள் சித்தர்கள். தலைமைச் சித்தர் திருமூலரும் சித்து விளையாடினார்.

முதல் சித்தர் திருமூலர் எந்நாட்டவர். எந்த ஊரினர், என்ன பேரினர், பெற்றோர் யார்? என்பன போன்ற கேள்விகளை எழுப்பி விடைகாண முற்படும் பொழுதுதான் 'ரிஷிமூலம், நதிமூலம் பார்க்கலாகாது' என்ற பழமொழிக்கு ஏற்ப கயிலை மரபைச் சேர்ந்தவர் திருமூலர் என்பது ஒன்றே பதிலாகின்றது. இலக்கியங்களும் இதற்குச் சான்றாக நிற்கின்றன.

"கயிலை வழியில் வந்தேன்' என திருமந்திரமும், "கயிலாயத் தொருசித்தர் பொதியில்சேர்வார்' என திருத்தொண்டர் நாயனார் புராணமும் கூறுகின்றன.

கயிலாயத்திலிருந்து பொதிய மலை நோக்கி வந்து கொண்டிருந்தார் ஒரு சித்தர். அவர் சாத்தனூரில் ஒரு அரிய காட்சியைக் கண்டார். மாடுகளை மேய்த்துக் கொண்டிருந்த 'மூலன்' என்ற பெயருடைய இடையனைப் பாம்பு தீண்டி விட்டதால் அவன் இறந்துவிட்டான். தங்களைப் பாதுகாத்த இடையன் இறந்து விட்டமையால் பசுக்கள் மாலை மயங்கிய பின்னரும் தம் வீடு சென்று சேராது இறந்து கிடக்கும் இடையனைச் சூழ்ந்து நின்று கண்

# A HEALING TOUCH

## T. T. DEVASTHANAMS INTRODUCES
## SRI BALAJI AROGYAVARAPRASADINI SCHEME

For ages, Tirumala, the abode of Lord Venkateswara, has been a great centre of pilgrimage Thousands of devotees visit the sacred hills every day and offer their solemn prayers to the Lord for their spiritual and physical well-being.

Alleviating human suffering has been a part of dedicated efforts of TTD to the mankind TTD already manages a Leprosorium, centre for physically handicapped, a poor home and also a central hospital To provide the most advanced medical technology to the needy, the TTD has launched another monument, a blessing from the Lord by opening Sri Venkateswara Institute of Medical Sciences -- a sophisticated super speciality centre on the lines of AIIMS of New Delhi & JIMPER of Pondicherry and PGI of Chandigarh. Total well being of man is the aim of Sri Venkateswara Institute of Medical Sciences, which apart from offering service, training and education in medical sciences, also encourages Research and development

The doors to such a state of the art technology should be open to our poor and disabled brethren.

With a view to achieving this, Sri Venkateswara Institute of Medical Sciences has introduced a New scheme Balaji Arogyavaraprasadini Scheme To accomplish the goal of proving the sophisticated medical technology to every individual at an affordable rate, we invite the generous co-operation of philanthropists and the general public

### The Scheme in essence:

A donor can make an endowment of Rs 1000/- or multiples thereof / Rs 1 lakh / Rs. 5 lakhs / Rs 10 lakhs to T.T Devasthanams which will in turn contribute matching grant The entire amount will be deposited in fixed deposit in a nationalised Bank and the interest accrued on it will be utilised for providing free medical services to the poor and the needy

A Chair in Sri Venkateswara Institute of Medical Sciences will be named after the donor who contributes Rs. 10 lakhs or above These endowment chairs are purely research oriented

- Donations can be made by any individual / family / company / firms etc
- The name of the donor who endows Rs 5 lakhs or more will be displayed prominently in the Reception hall of the hospital.
- The discharge ticket of the benefited patient will carry the name of the donor

### Additional Benefit and facilities :

- Donations to Sri balaji Arogyavaraprasadini Scheme are exempted from Income Tax under 80 (G)
- Paid rooms / Air conditioned rooms will be allotted to family members of the donor in the hospital
- Paid rooms can be named after donors who contribute a sum of Rs 5 lakhs or above
- By paying Rs 5 lakhs and above, a donor may sponsor one operation per year
- Donors can sponsor feeding of the In-patients and out-patients They may also sponsor a travel fellowship for the faculty per year

All donations, by D Ds drawn in favour of The Executive Officer, T T Devasthanams, Tirupati-517 501 (Andhra Pradesh) should reach the Director, Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati along with the following particulars

- Name and address along with the latest passport-size photographs of the family members of the donor who contributes Rs 1 lakh or more
- Name and address of the person to whom Income Tax Exemption Certificate is to be issued

The donors are also welcome to offer equipment, vehicles etc to SVIMS or even sponsor health camps in rural areas, if they so desire Further details can be had from

**The Executive Officer**
**T.T. Devasthanams, Tirupati**
**or**
**The Director**
**Sri Venkateswara Institute of Medical Sciences, Tirupati**

**EXECUTIVE OFFICER**



LORD VENKATESWARA IN BRAHMOTSAVAM
(Utsava Murthy)



LORD VENKATESWARA - MUTHYALA KAVACHAM
(Utsava Murthy)

## TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

# Sri Venkateswara Vanabhivriddhi Scheme

## An Appeal . . .

*He that planteth a tree is the servant of God*
*And Provideth a kindness for many generation*
*And faces that he, hath not seen shall bless him*

Sacred Forests of Tirumala are the precious gift of Lord Venkateswara to mankind. With a view to safeguarding its unique yet delicate ecological condition, Tirumala Tirupati Devasthanams have introduced a series of exciting schemes called **Sri Venkateswara Vanabhivriddhi Schemes.** The Schemes seek to provide a rare opportunity to the public for participation in a massive plantation project implemented by the Forest Department of T.T. Devasthanams.

The salient features of Sri Venkateswara Vanabhivriddhi Schemes are:

**VRIKSHA SAMVARDHANAM :** Under this Scheme, about one acre of land will be brought under plantation.

**Benefits :**

- Plantation will be named after the donor or person of his choice.
- Every year free accommodation on 2 ordinary days at Tirumala for 10 years.
- One paid special darshan every year for 5 persons for 10 years.

**Donation :** Rs. 15,000.

**VRIKSHA PRASADAM :** The Scheme is proposed for raising 100 fruit and flowering seedling every year.

**Benefits :**

- Distribution of one hundred seedlings, both fruit bearing and flowering in the donor's name every year.
- Two days free stay at Tirumala every year on any ordinary days for 10 years.
- One paid special darshan every year for five persons for 10 years.

**Donation :** Rs. 10,000.

**SMARAKA VANALU :** Under this scheme 10 saplings of selected species will be planted in a grove and maintained for five years.

**Benefits :**

- The grove will be named after the donor.
- Every year paid special darshan for five persons for five years.

**Donation :** Rs. 2,000.

**VANA SAMRAKSHANA BHAGA SWAMYAM :** is proposed to protect and improve the natural forest cover on Tirumala hills.

**Benefits :**

- Diplay of the donor's name.
- Paid special darshan for five persons for one year.

**Donation :** Rs. 1,000.

**ADHYAYANA VANALU :** Plantation and maintenance of a variety of species will be taken up under this scheme in the proposed botonical garden at Tirumala.

**Benefits :**

- Display of donor's name near the plant.

**Donation :** Rs. 500.

**VRIKSHA DATTATA :** is a bold scheme featuring adoption and plantation of avenue trees on the ghat road and at Tirumala.

**Benefits :**

- Display of donor's name.

**Donation :** Rs. 250.

We appeal to all devotees to donate liberally and help us to preserve the priceless forest wealth of Tirmala - The Abode of LORD VENKATESWARA.

Please send your donations by Demand draft to the **The Executive Officer, T. T. Devasthanams, TIRUPATI - 517 507.**

EXECUTIVE OFFICER

ணீர் விட்டுக் கதறின. இக் காட்சியைக் கண்டார் சித்தர். தாம் செய்த வினைப் பயனுக் கேற்ப தேவராகவும், மனிதரா கவும், விலங்கு, பறவை, மரம், செடி, கொடி, கல் என உரு வெடுக்கும் ஆன்மாவின் கதறல் மட்டுமே சித்தர் கண்களுக்குப் புலப்பட்டது. அவற்றின் துயர் களைய விரும்பினார் சித்தர்.

உலகை நல்வழிப்படுத்தத் தாம் கண்ட இறையனுபவங் களை,

"என்னை நன்றாக இறைவன்
படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்
செய்யுமாறே"

என்றும்,

"நான் பெற்ற இன்பம் பெறுக
இவ்வையகம்"

என்றும் உலகை உய்விக்கும் நோக்கோடு தென்னாடு வந்தார்.

பசுக்குலம் படும் துயர் களை யத் தாம் கற்ற யோகங்களின் பயனாகத் தம் உயிரைத் தம் உடலிலிருந்து பிரித்து எடுக்க முடிவு செய்தார். தம் உட லைப் பத்திரப்படுத்தும் வகை யில் ஒரு புதரின் அருகில் சென்று தம் உயிரை உடலிலி ருந்து பிரித்தார். பின் அதனை இறந்து கிடக்கும் மூலன் உட லில் செலுத்தினார். அதன்பின் இடையன் உறக்கத்திலிருந்து விடுபட்டவன்போல் எழுந்தான். அல்ல! அல்ல!! மூலன் உடலில் இருந்த சித்தர் எழுந்தார். மாடு களை அவரவர் வீடு சேர்த்தார்.

கயிலாயத்திலிருந்து வந்த சித்தருக்குத் தமிழ் தெரியுமா? தமிழ்ப் பேசினாரா? தமிழ்ப் பாடல் பாடுமளவிற்குப் புலமை யுள்ளவரா? எனபன போன்ற கேள்விகள் நம் இளம் உள்ளங்க ளில் எழுகின்றன. நிலவியல் அடிப்படையில் கி.மு. நூற் றுண்டுகளில் வரலாற்று அடிப் டையில் அரப்பா, மொகஞ்ச தாரோ பெருநகரங்களில் வாழ்ந் தவன் தமிழன். அவன் பேசிய மொழி தமிழ்மொழி என்பதும் உண்மை. அடுத்தபடியாகச் சித் தர்கள் சிவனுக்கு ஒப்பானவர். எல்லாம் அறிந்தவர். கால, தேச, இனம், மொழி கடந்தவர்களே என்றும் அமையலாம்.

மாடுகளை அவரவர் வீடு சேர்த்தபின் புதிய சிக்கல் ஒன்று சித்தருக்கு ஏற்படுகின் றது. இடையன் மனைவி தன் கணவன் பொழுது சாய்ந்தும் வீடு வராததால் மூலன் உரு வில் இருந்த 'சித்தரை' வீட் டிற்கு வருமாறு அழைக்கின் றாள். அவர் வீடுவர மறுத்தார். உனக்கும் எனக்கும் யாதொரு தொடர்பும் இல்லை என்றார். வீடு செல்லாது பொது மடம் சென்றார். பொழுது புலர்ந்தது. மூலன் மனைவி ஊர்ப் பொதுமக்களைக் கூட் டுகின்றாள். அவர்கள் யோக நிலையில் சித்தர் இருப்பதை காணுகின்றனர். ஊர் மக்க ளும் இதனை உணர்ந்து கொள் கின்றனர். ஆனால் மூலன் மனைவியால் இதனை எளிதில் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. பேதையவள் கயிலாயத்தொரு சித்தர் பொதியில் சேரும் வழி யில் 'தன் கூடுவிட்டு மூலன் கூட்டில் (உடலில்) புகுந் ததை எவ்வாறு அறிய இய லும். வருத்தமுடன் அவள் அவரைவிட்டு நீங்கினாள்.

பின்பு, சித்தர் தன் உடலை மறைத்து வைத்த இடத்திற்குச் சென்று தேடினான். அவ்வு



டல் கிடைக்கவில்லை. அதனால் இறைவன் தனக்கு மூலன் உடலில் தன்னை இருக்கவேண்டும் என்று கட்டளை இடுவதாக நினைத்து திருவாவடுதுறை வந்தார். அக்கோவிலில் உள்ள அரச மரத்தடியில் யோகத்தில் அமர்ந்தார்.

ஆண்டுக்கு ஒன்றாக எளிய தமிழில்,

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"
"அன்பே சிவமாவதாரும் அறிகிலர்"
"சிவசிவ என்றிட சிவகதிதானே"

என்பன போன்ற பொருள் நிறைந்த மூவாயிரம் பாடல்களைப் பாடினார். இப்பாடல்கள் 'திருமந்திரம்' எனப் பெயர் பெற்று 'பத்தாம் திருமுறையாகத்' தொகுக்கப் பட்டுள்ளது.

இன்று திருமந்திரம் இடைச் செறுகல்களோடு மூவாயிரத்துக்கும் அதிகமாகப் பதிப்பிக்கப் படுகின்றன. மூவாயிரம் பாடல்களும் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. திருமந்திரம் ஒன்பது தந்திரங்களால் ஆனது. இறைவன் அருளிய ஒன்பது ஆகமங்களுக்கு இணையானது அவை.

முதல் தந்திரம் - காரண ஆகமம்.
இரண்டாம் தந்திரம் - காமிக ஆகமம்
மூன்றும் தந்திரம் - வீராகமம்
நான்காம் தந்திரம் - சிந்தாகமம்
ஐந்தாம் தந்திரம் - வாதுளாகமம்
ஆறும் தந்திரம் - வியாமளாகமம்
ஏழாம் தந்திரம் - காலோத்ராகமம்
எட்டாம் தந்திரம் - சுப்பிராகமம்
ஒன்பதாம் தந்திரம் - மகுடாகமம்

என்பன.

இந்நூல் மிகச் சிறந்த சாத்திர நூல் என்று தமிழ்ப் பெருமக்களாலும், தமிழ்ச்சான்றோர்களாலும் போற்றப்படுகின்றது. இதனைக் கற்பார் இம்மைப் பயன் யாவும் பெற்று சிவத்தோடு ஒன்றுபடுவர். இவ்வுலகில் காணாதனவெல்லாம் கண்டு, கேளாதனவெல்லாம் கேட்டுப் பேரின்பப் பெருங்கடலில் திளைத்துத் திருமூலரைப் போல், உடலை வளர்க்கும் உபாயம் அறிவர்.

'உடல் வளர்த்தேன் உயிர்
வளர்த்தேனே'

என்று உடலையும் உயிரையும் ஒருசேர வளர்த்து, பன்னூறு ஆண்டுகள் வாழும் வழியை மக்களுக்குச் சொன்னதால் திருமூலரை முதல் சித்தராக உலகம் ஏற்றுக் கொண்டதில் வியப்பில்லை.





## ஸ்ரீராமானுஜர் வழியில்...

பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் வைணவ ஆசார்யரான ஸ்ரீஇராமானுஜர், திருமலையில் உறையும் ஏழுமலையானைத் தரிசிக்க, திருமலையை அடைய எண்ணி, திருமலையின் அடிவாரத்திற்கு வந்தபோது, அத்திருமலையை 'ஆதிசேஷனாக' புராணம் போற்றியதால், அத்திருமலையில் தன் கால்கள் பட்டு, அதனால் பாகவத அபசாரம் ஏற்படுமோ என்று பயந்து, திருமலையைத் தன் முழங்கால்கள் கொண்டே தவழ்ந்து சென்று திருமலைக்கோயிலை அடைந்தார் என்பது வரலாறு கூறும் செய்தியாகும். இது சாத்தியமே, உண்மையே என்று இன்றைய இளையதலைமுறையினர் அறிந்துகொள்ளும் வகையில், அண்மையில் தி.தி. தேவஸ்தான இளநிலை எழுத்தரான திரு. பாலாஜி என்பவர் திருப்பதி மலை அடிவாரத்திலிருந்து ஏழு கிலோமீட்டர் தொலைவுள்ள திருமலை கால்நடை மலை வழி சாலையினை இருபது மணிநேரம் 35 நிமிடங்களில் தன் முழங்கால்களைக் கொண்டே கடந்து, கோயிலை அடைந்தார். மஞ்சளாடை தரித்தும், திருமண் அணிந்தும் அண்மையில் ஒருநாள் விடியற்காலை 2-30 மணிக்குத் தன் புனித பயணத்தைத் துவக்கினார். இதுபோது அவருக்குத் துணையாக இருந்தது ஏழுமலையானின் 'கோவிந்த நாமம்' மட்டுமே என்பது அவர்தம் அனுபவமாகும். இதற்கு முன்னர் திரு. பாலாஜி அவர்கள் தன் உடலை உருட்டிக் கொண்டே திருமலையை சென்றடைந்தார் என்பது மற்றுமொரு அரிய சாதனையாகும். இவர் இதுவரை தொடர்ந்து 131 சனிக்கிழமைகள் கால்நடையாகத் திருமலைக்கு சென்றுள்ளார். அவர்தம் சமய ஈடுபாட்டினைப் பாராட்டும் வகையில், அவர் அண்மையில் திருமலைக்கோயிலில் பணிபுரியும் வகையில் பதவி மாற்றஞ் செய்யப்பட்டுள்ளார்.

(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்

## மூலம் : 195

"அவையான: கர்ம ஜ்ஞாந பக்தி யோகங்களும், அவதார ரஹஸ்ய ஜ்ஞாநம், புருஷோத்தம வித்யை, தேச வாஸம், திருநாம ஸங்கீர்த்தநம், திருவிளக்கெறிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாய புத்த்யா செய்யுமவையும்."

1) **உபாயம் என்னும் எண்ணத்தோடு செய்யப்படும் செயல்கள் யாவை?**

கன்ம யோகம், ஞானயோகம், பக்தியோகம் அவதாரத்தின் உண்மையைப் பற்றிய அறிவு, ஸ்ரீமந்நாராயணனே மேற்பட்டவன் என்னும் ஞானம், அவன் உகந்தருளின நிலங்களின் வாசம், திருநாம சங்கீர்த்தனம், சன்னிதானங்களில் திருவிளக்கேற்றுதல், பகவானுக்கு அழகிய மலர்களை இடுதல் முதலியன உபாயம் என்னும் எண்ணத்தோடு செய்யப்படும் செயல்களாம்.

## மூலம் : 196

"ஸர்வ சப்தத்தாலே, அவ்வவ ஸாதந விசேஷங்களை அநுஷ்டிக்குமிடத்தில் அவற்றுக்கு யோக்யதா பாதகங்களான நித்ய கர்மங்களைச் சொல்லுகிறது."

1) **'ஸர்வ' என்னும் சப்தத்தின் பொருள் யாது?**

அவரவர்கட்கேற்ற கருமங்களை மேற்கொள்ளும் போது, அக்கருமங்களைச் செய்தற்குத் தகுதியை உண்டாக்கக்கூடிய நித்ய கருமங்கள் இன்னவை என்பது தருமத்திற்கு அடைமொழியாய் அமைந்துள்ள 'ஸர்வ' என்னும் சப்தத்தின் பொருளாகச் சொல்லப்பட்டுள்ளது.

2) **நித்ய கருமங்கள் என்பவை யாவை?**



சந்தியா வந்தனம் முதலியன நித்திய கருமங்கள் எனப்படும்.

3) **நைமித்திய கருமங்கள் என்பவை யாவை?**

ஐந்து மகா யாகங்கள் முதலியன நைமித்திய கருமங்கள் எனப்படும்.

## மூலம் : 197

"ஆக, ச்ருதி ஸ்ம்ருதி சோதிதங்களாய், நித்ய நைமித்திகாதி ரூபங்களான கர்ம யோகாத்யுபாயங்கள் என்றபடி."

1) 'ஸர்வதர்மாந்' என்பதன் பொருளைச் சுருக்கிக்கூறுக.

வேதம் ஸ்மிருதி இவைகளால் விதிக்கப்பட்டனவும், நித்திய நைமித்திகங்களை வடிவாகக்கொண்டனவுமான கன்மயோகங்கள் முதலியன 'ஸர்வ தர்மாந்' என்னும் சப்தத்தின் பொருளாகக் கூறப்பட்டுள்ளது.

கன்ம யோகம் என்பது நித்திய நைமித்திகம் முதலானவற்றை வடிவாக உடையது. தினந்தோறும் குறிப்பிட்ட காலத்தில் செய்ய வேண்டிய சந்தியா வந்தனம் போன்றுள்ள தர்மம் நித்திய கருமம் எனப்படும்.

கிரகணம் முதலிய காலங்களில் செய்யப்படும் சடங்குகள் நைமித்தியம் எனப்படும்.

நித்திய கருமங்களைப் போன்றே நைமித்திக கருமங்களையும் செய்தல் இன்றியமையாதது.

## மூலம் : 198

"இவற்றைத் தர்மம் என்கிறது, ப்ரமித்த அர்ஜ்ஜுனன் கருத்தாலே."

1) கன்ம யோகங்கள் முதலியவற்றைத் தருமங்கள் எனக்கூறுதற்குக் காரணம் யாது?

சேதனனுடைய அத்தியந்த, பாரதந்திரிய சொரூபத்துக்குக் கன்மயோகம் முதலியன விரோதிகளாக உள்ளன. எனினும் இவை தருமங்கள் என்றே கூறப்படுகின்றன.

தனக்குரிய க்ஷத்திரிய தருமமான யுத்தத்தை அதர்மம் என்றும், கன்மரூன பக்திகளைத் தருமம் என்றும் மயங்கிய அருச்சுனனுடைய நினைவால்தான் பகவான் இவற்றைத் தருமங்கள் என்கிறார்.

நோயால் வருந்துபவன் மருந்தை உண்ண மறுக்கின்றான். அப்போது அவனுக்கு வெல்லம் முதலான பொருள்களோடு மருந்தைக் கலந்து தாயானவள் ஊட்டுகிறாள். அந்த மருந்தும் நோயைப் போக்கி அவனுக்கு நன்மையை உண்டாக்குகிறது.

அதுபோலவே, பகவானும் சித்தோபாயமான தன்னைக் கன்மரூன பக்திகளாகிற உபாயங்களோடு கலந்து சேதனனுக்குப் பலனளிக்கிறார்.

2) மூலம் 190 முதல் 198 வரை கூறியுள்ள கருத்துக்களைத் தொகுத்து வரைக.

"முதல் வாக்கியத்தில் ஆறு பதங்கள் உள்ளன. இவற்றுள் முதல் பதம் "ஸர்வ தர்மாந்" என்பது. இத்தரும சப்தம் மற்றைய பயன்களுக்கு ஏதுவானவற்றைக் குறிக்காமல், மோட்சத்திற்கு ஏதுவானவற்றையே இங்கு இயம்புகிறது. அவை பலவாயிருத்தலின், இந்தத் தரும சப்தம் பலவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத் தருமங்களைச் செய்வதற்கு ஏற்ற தகுதியை உண்டு பண்ணும் நித்ய கன்மாக்களை 'ஸர்வ' சப்தம் குறிக்கிறது. அக்கருமங்கள் வேதம், ஸ்மிருதி முதலியவற்றால் விதிக்கப்பட்ட நித்திய நைமித்தியங்களாம். இவற்றைத் தருமங்கள் என்று சொல்லப்பட்டதற்குக் காரணம் மயங்கிய அர்சுனனுடைய கருத்தாலே தான்!" என்பனவான கருத்துக்கள் மூலம் 190 முதல் 198 வரை சொல்லப்பட்டுள்ளன.

## மூலம் : 199

"பரித்யஜ்ய"

1) 'பரித்யஜ்ய' என்பதன் பொருள் யாது?

'பரித்யஜ்ய' என்பதற்குப் பொருள் விடுகை (விடுதல்) என்பதாகும்.

## மூலம் : 200

"த்யாகமாவது - உக்தோபாயங்களை அநுஸந்தித்து, சுக்திகையிலே ரஜதபுத்தி பண்ணுவாரைப் போலேயும், விபரீத திசாகமநம் பண்ணுவாரைப் போலேயும் அநுபாயங்களிலே உபாயபுத்தி பண்ணினோமென்கிற புத்தி விசேஷத்தோடே த்யஜிக்கை."

1) தியாகமாவது யாது?

தியாகம் என்பதற்குப் பொருள் விடுகை என்பதாகும். ஆனால், இவ்விடத்தில் வெறும் விடுகை என்பது மட்டும் பொருளன்று! புத்தி விசேஷத்தோடும் கூடியவனாய் விடுகையே இங்கு விடுகை எனப்பொருள்தரும்.

பகவான் சரம சுலோகத்திற்கு முன்பு பல சுலோகங்களில் கன்மரூன பக்திகளாகிய மற்றைய உபாயங்களை அருளிச்செய்துள்ளார். அவ்வுபாயங்களுக்குச் சில இயல்புகள் உள. அவையாவன:

சேதனனுடைய முயற்சியையே தன் தோற்றத்தில் எதிர் பார்த்திருத்தல், தான் அறிவில்லாததாயும் சக்தியற்றதாயும் இருத்தலால், பயனைக் கொடுக்குங்கால் பகவானையே நோக்கி நிற்றல், முன் சூத்திரத்தின் விளக்கத்தில் கூறியபடி மருந்தை மறைக்கும் வெல்லத்தைப் போன்றிருத்தல் முதலியன.

இவ்வியல்புகளோடுங்கூடி யுள்ள கன்மஞான பக்திகளைச் சிந்தித்தலையே "உக்தோபாயங் களை அநுசரித்தல்" என்னும் பகுதியில் குறிப்பிடுகின்றார்.

சிப்பியை வெள்ளியென்று மயங்குவார் போலவும், தாம் ஒரு பயனை விரும்பிச் செல்லக் கருதிய வழிக்கு மாறான திசை யையே தாம் செல்ல வேண்டிய திசை என்று மயங்கிச் செல் பவர் போலவும் "பெருமானை அடைவதற்கு ஏற்ற உபாயத்தை மேற்கொள்ள வேண்டிய நாம் அதற்கு மாறாக உபாயமல்லாத வற்றிலே உபாய புத்தி பண்ணி னோமே!' ' என்கிற புத்தி விசே ஷத்தோடுங்கூடியவனாய் விடு கையே இங்குத் தியாகம் என்று பொருள்படும்.

புத்தி விசேஷத்தையும் விடு தல் என்பது இங்குக் கருத் தன்று.

## மூலம் : 201

" 'பரி' என்கிற உபஸர்க்கத் தாலே, பாதகாதிகளை விடுமாப் போலே, ருசி வாஸனைகளோ டும் ஸஜ்ஜையோடும்கூட மறு வலிடாதபடி விடவேணுமென்கி றது."

1) **உபசர்க்கம் என்றால் என்ன?**

வினைச் சொல்லுக்கு முன் வந்து அதனைத் தொடர்ந்து நிற்கும் சொல் உபசர்க்கம் எனப்படும்.

2) **பரி என்னும் உபசர்க்கத்தின் பொருள் யாது?**

'பரி' என்னும் உபசர்க்கம் 'எல் லாம்', 'மிகுதி' என்னும் இரு பொருள்களையும் தரும். எனி னும், இங்கு மிகுதி என் னும் பொருளே ஏற்புடையது. ஏனெனின், எல்லாம் என்னும் பொருள் 'சர்வ' என்னும் பதத் தால் முன்பே குறிக்கப்பட்டுள் ளது.

3) **'பரி' என்னும் உபசர்க்கத்தாலே விளக்கப்படும் பொருள் யாது?**

கள்ளுண்ணல், சூதாடுதல், திருடுதல், கொலை புரிதல் முத லிய பாவங்களை ஒருவன் விடும் பொழுது, "நாம இவற் றைச் செய்கின்றோமே!" என்னும் நாணத்தோடுங் கூடியவனாய், அவற்றின் தொடர்புக்கு ஏதுவா யுள்ள ருசி வாசனைகளோடும் அப்பாதகச் செயல்களை விடுகி றான்.

அதுபோலவே, மற்றைய உபா யங்களையும் இன்றியமையாது விட்டே ஆகவேண்டும் என்னும் பொருள் இந்த உபசர்க்கத்தால் விளக்கப்படுகிறது.

4) **ருசி என்றால் என்ன?**

நாம் ஒரு காரியத்தைப் பற்றி அறிந்தே செய்கின்றோம். அங் ஙனம் செய்யத்தூண்டுவது எதுவோ, அதுவே ருசியாகும்.

5) **வாசனை என்றால் என்ன?**

நான் ஒரு காரியத்தைப் புத்தி யறியாமல் செய்கின்றோம். அங் ஙனம் செய்யத்தூண்டுவது எதுவோ, அதுவே வாசனை எனப்படும்.

6) **கன்மஞான பக்திகளைச் சாத்தி ரங்கள் தருமங்கள் எனச் சொல் லுகின்றன. அப்படியிருக்க இத் தருமங்களைத் திருடுதல் போன்ற பாவங்களுக்கு ஒப்பாகச் சொல்லு வது எங்ஙனம் பொருந்தும்?**

தரும நூல்களைக் கற்று அற நெறியில் நின்றொழுகும் நீதிமா னுக்குக் கொலைபுரிதல், திரு டுதல் முதலானவை பாவச் செயல்களாகவே தோன்றும்.

அதுபோலவே, தன் அத்தி யந்த பாரதந்திரிய நிலையைத் தெள்ளிதின் அறிந்து அதற் கேற்ப ஒழுகும் பிரபன்னனுக் கும், பகவானைத் தவிரக் கன் மஞான பக்திகளாகிற மற்ற உபாயங்களை மேற்கொள்ளுதல் பாவங்களாகவே கருதப்படும்.

## மூலம் : 202

"ல்யப்பாலே, 'ஸ்நாத்வா புஞ் ஜீத' என்னுமாப்போலே, உபா யந்தரங்களைவிட்டே பற்ற வேணும் என்கிறது."

1) **'த்யஜ்ய' என்னும் ல்யப்பின் பொருள் யாது?**

**உணவு**
உண்ணுங்கால் குளித்தே உணவு கொள்ளுதல் வேண்டும் என்னும் விதியைப்போன்று, பெருமானா கிற உபாயத்தைப் பற்றுங்கால், கன்மஞான பக்திகளாகிற மற் றைய உபாயங்களை விட்டே பெருமானைப் பற்ற வேண்டும் என்னும் கொள்கை 'த்யஜ்ய' என்னும் ல்யப்பால் விளக்கமா கிறது.

(தொடரும்)



# 'மணிமண்டப க்ஷேத்ரம்'

திரு. கே.வி. ராதாகிருஷ்ணன் - ஸ்ரீஹரிகோட்டா.

மன்னார்போளூர் என்ற மிகச் சிறிய கிராமம் காளிந்தி நதிக்கரையில் சூளூர்ப்பேட்டை-காளஹஸ்தி பஸ் மார்க்கத்தில் சூளூர்ப்பேட்டையில் இருந்து நான்கு கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது. இங்கு மிகவும் அழகான, பழமையான, மணி மண்டப க்ஷேத்திரம் என சரித்திரப் புகழ்வாய்ந்த ஸ்ரீசத்யா ஜாம்பவதி சமேத ஸ்ரீஅழகு மல்லாரி கிருஷ்ணஸ்வாமி தேவாலயம் உள்ளது.

இந்தத் திருக்கோயில் மிகவும் தொன்மையாகவும் காண்பதற்கு அரிய கலைப்பொக்கிஷமாகவும் இருக்கிறது. சுமார் 10-ம் நூற்றுண்டில் சோழ மன்னர்களால் கட்டப்பட்டிருக்கலாம் என்று நம்பப்படுகிறது. 13ம் நூற்றுண்டில் நெல்லூரை ஆட்சி செய்த புகழ்பெற்ற மனுமு சித்திராஜா காலத்தில் மிகவும் சிறப்புற்று திகழ்ந்ததாகத் தெரியவருகிறது. பின்னர் வேங்கடகிரி ஜமீந்தார்களால் பரிபாலனம் செய்யப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. 1800ம் ஆண்டு வேங்கடகிரி ஜமீந்தார் இந்த கோயிலுக்கென ஐந்து கிராமங்களை மான்யமாகக் கொடுத்தார். ஆனால் காலக்கிரமத்தில் கோயில் சொத்துக்கள் பிறர் வசத்திற்குச் சென்றது. வருமானம் இல்லாமல் இப்போது மிகவும் பாழடைந்த நிலைமையில் உள்ளது.

ஒரு காலத்தில் ஒன்பது அர்ச்சகர்களால் தினம் ஒன்பது முறை பூஜிக்கப்பட்டு வந்த ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு இன்று ஒரு முறை பூஜைக்கே சிரமமான நிலைமை. வருடத்திற்கு இரு முறை பிரம்மோத்சவம் விழாவுடன் சிறப்புற்று விளங்கிய இந்த தேவாலயத்தில் கோபுரககலசங்கள் உடைந்த நிலையில் சிதிலாவஸ்தையில் உள்ளது.

இந்தக் கோயிலின் ஸ்தல புராணம் மிகவும் சிறப்பானது. ஸ்ரீசத்ராஜித் சூர்ய பகவானைக்



குறித்துக் கடுந்தவம் புரிந்தார். அவரது தவத்தை மெச்சி ஸ்ரீசூர்யபகவான் சத்ராஜித்துக்கு சமந்தகமணி என்னும் அரிய ஆபரணத்தை அளித்தார். இந்த ஆபரணம் அட்சய பாத்திரம் போன்று தினமும் தேவையானஅளவு தங்கத்தை அளிக்க வல்லது. லோக க்ஷேமத்தின் பொருட்டு ஸ்ரீகிருஷ்ண பகவான் அந்த ஆபரணத்தைத் தனக்கு அளிக்குமாறு கேட்டார். ஆனால் சத்ராஜித் மறுத்துவிட்டதோடு தனது தம்பி பிரசேன ஜித்துக்குக் கொடுத்தார். ஒருநாள் பிரசேனஜித் வேட்டைக்குச் சென்றபோது ஒரு சிங்கம் பிரசேனஜித்தைக் கொன்று சமந்தகமணியை அபகரித்துக் கொண்டது. ஸ்ரீஜாம்பவான் அந்த சிங்கத்தைக் கொன்று சமந்தகமணியை தனது புத்திரியான ஜாம்பவதிக்குக் கொடுத்தார். தனது சகோதரன் திரும்பி வராதது கண்டு சத்ரஜித் ஸ்ரீகிருஷ்ண பகவான் மீது கோபம் கொண்டார். ஸ்ரீகிருஷ்ண பகவான் சமந்தக மணியைத் திருடிவிட்டதாகக் குற்றம் சாட்டினார். ஸ்ரீகிருஷ்ண பகவான் தன்மீது ஏற்பட்ட அபகீர்த்தியை போக்கிக் கொள்வதற்காக ஸ்ரீவிநாயக சதுர்த்தியன்று ஸ்ரீவிக்னேஸ்வரரைத் தரிசித்து சமந்தகமணியைத் தேடும் பொருட்டு கானகம் சென்றார். அங்கு நடந்தவற்றை நாரதர் மூலம் அறிந்து ஸ்ரீகிருஷ்ணபகவான் ஜாம்பவான் குகைக்குச் சென்றார். அங்கு ஜாம்பவானின் மகள் ஜாம்பவதியிடன் சமந்தக மணி இருப்பதைக் கண்டார். ஸ்ரீகிருஷ்ணபகவான் யார் என்று அறியாமல் சமந்தக மணியைக் கவர வந்திருக்கிறார் என்று நினைத்து ஜாம்பவான் அவரை யுத்தத்திற்கு அழைத்தார். ஜாம்பவான் ஸ்ரீகிருஷ்ணபகவானுடன் 21 நாள் மல்யுத்தம் புரிந்தார். யுத்தத்தின் முடிவில் தோல்வியடையும்போதுதான் தான் யாரிடம் யுத்தம் செய்து கொண்டிருந்தோம் என்பதை உணர்ந்து ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் சரண் அடைந்து சமந்தக மணியை ஸ்ரீகிருஷ்ணபகவானிடம் அர்ப்பணம் செய்ததோடு தனது மகளான ஸ்ரீஜாம்பவதியை ஸ்ரீகிருஷ்ணபகவானுக்குத் திருமணம் செய்து வைத்தார்.

இந்தத்திருத்தலத்தில் ஜாம்பவான் ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு சமந்தக மணியை அர்ப்பணம் செய்ததால் இந்த க்ஷேத்திரத்துக்கு மணிமண்டப க்ஷேத்திரம் என்று புராணங்களிலும் காவ்யங்களிலும் சிறப்பாகப் பேசப்படுகிறது.

இந்தக் கோவிலின் பிரதான தெய்வமாக ஸ்ரீசத்யா ஜாம்பவதி சமேத ஸ்ரீஅழகு மல்லாரி கிருஷ்ணசுவாமி கொலுவீற்றிருக்கிறார். இங்கு ஸ்ரீகிருஷ்ண பகவான் ஜாம்பவானுடன் மல்லயுத்தம் செய்ததால் மல்லஹரிகிருஷ்ணர் என்று அழைக்கப்பட்டார். அதுவே காலக்கிரமத்தில் மல்லாரி கிருஷ்ணர் எனவும், காண்பதற்கு மிகவும் அழகாகக் கண்ணைக் கவரும் வண்ணம் இருப்பதால் அழகு மல்லாரி கிருஷ்ணஸ்வாமி எனவும் அழைக்கப்படுகிறார். இங்குதான் கிருஷ்ண பகவான் மல்லயுத்தம் செய்ததால் இவ்விடம் மல்லஹரி போரூர் என்று அழைக்கப்பட்டது. நாளடைவில் இது மருவி மன்னார் போரூர் என்று அழைக்கப்படுகிறது.

ஸ்ரீஜாம்பவானிடம் ஏன் கிருஷ்ணபகவானிடம் மல்லயுத்தம் செய்ய வேண்டும் என்று பார்த்தால் ஜாம்பவான் ராமாயண காலத்தவர். ராவணவத பர்யந்தம் ஸ்ரீராமரோடு இருந்தார். ஸ்ரீராமபட்டாபிஷேகத்திற்குப் பிறகு ஸ்ரீராமர் வானர வீரர்களான அனுமார், சுக்ரீவர் முதலியவர்களுக்கு மாணிக்யாதி ஆபரணங்களைப் பரிசளித்தார். வீபிஷணனுக்குத் தனது குலதெய்வமான ஸ்ரீரங்கநாதரை அளித்தார். ஆனால் ஜாம்பவானிடம் என்ன பரிசு வேண்டும் என்று கேட்டதற்கு, தான் ஸ்ரீராமசந்திரமூர்த்தியுடன் மல்யுத்தத்தில் போராட வேண்டும். அதுவே எனது விருப்பம் என்று தெரிவித்தார். அதற்கு ஸ்ரீராமர் அந்த விருப்பம் தனது அடுத்த அவதாரமான ஸ்ரீகிருஷ்ண அவதாரத்தில் நிறைவேறும் என வாக்களித்தார். (ஜாம்பவானை ஸ்ரீராமர் தவிர வேறு யாரும் மல்லயுத்தத்தில் வெல்ல முடியாது) எனவே மணிமண்டப க்ஷேத்திரத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் ஜாம்பவானிடம் யுத்தம் செய்து ஜாம்பவானை வென்று சமந்தக மணியையும் பெற்றார். தன்னை தோற்கச் செய்த ஸ்ரீகிருஷ்ணர் ஸ்ரீராமரே என்று அறிந்து ஜாம்பவான் சரணடைந்தார்.

இந்தக் கோயிலில் பிரதான தெய்வமான ஸ்ரீகிருஷ்ணர் சத்யபாமா ஜாம்பவதியுடன் கொலுவீற்றிருக்கிறார். அவருக்கு எதிரே கருடாழ்வார் ஒன்பதரை அடி உயரத்துடன் அஜானுபாகுவாக அஷ்ட நாகபூஷணங்களுடன் காக்ஷி அளிக்கிறார். மூலவிக்ரஹம் ஐந்தரை அடி உயரம்தான். ஆனால் வாகனமான கருடாழ்வாரோ ஒன்பதரை அடி

உயரம். வைணவத் திருத்தலங்களில் பெரிய திருவடி என அழைக்கப்படும் கருடாழ்வார் மூலவிக்ரஹத்தைக் காட்டிலும் உயரம் குறைந்தவராக இருக்க வேண்டும். ஆனால் இங்கு வழக்கத்துக்கு மாருக இருக்கிறது. அதனால் கருடாழ்வார் பாதாளத்தில் இருந்து விஸ்வரூப தர்சனம் கொடுக்கிறுர். அத்துடன் கண்களில் கண்ணீர் நிரம்ப இருப்பது போன்றும் ஒரு கன்னம் சற்று வீங்கி இருப்பது போன்றும் பெரிய சபையில் தனக்கு ஏற்பட்ட அவமானத்தை ஒப்புக்கொள்வது போலவும், இதையெல்லாம் ஸ்ரீகிருஷ்ண பகவானிடம் முறையிடுவதுபோலவும் இந்தக் கருட விக்ரகம் அமைக்கப்பட்டு இருப்பது இந்தத் தலத்தின் சிறப்பு அம்சமாகும்.

இது குறித்து ஸ்தல புராணம் கூறுவது யாதெனின் ஜாம்பவானிடம் மல்லயுத்தம் செய்த கிருஷ்ண பகவான் ஜாம்பவான் தனது தோல்வியை ஒப்புக்கொண்டு சரணடையவே ஜாம்பவானுக்கு ஸ்ரீகோதண்டராமராக தரிசனம் கொடுக்க எண்ணி கருடாழ்வாரை அழைத்து இமாலயத்தில் தவம் செய்து கொண்டிருக்கும் ராமபக்தரான ஸ்ரீஹனுமாரை மணிமண்டப க்ஷேத்திரத்திற்கு அழைத்துவரும்படி ஆக்ஜை பிறப்பித்தார். பெரிய திருவடியான கருடாழ்வாரோ தான் எப்போதும் மகாவிஷ்ணுவை அழைத்துச் செல்லும் பராக்கிரமசாலி என்றும் தன்னைவிட உயர்ந்த விஷ்ணு பக்தர் யாரும் இல்லை என எண்ணி விஸ்வரூபம் எடுத்து இமயமலை சென்று அங்குத்தவம் செய்யும் சிரஞ்சீவியான ஸ்ரீராமபக்த ஹனுமானை மணிமண்டப க்ஷேத்திரமான மல்லஹரி போரூருக்கு வருமாறு கட்டளையிட்டார். ஆனால் ராமரைத் தவிர வேறு தெய்வத்தை வேண்டாத ஹனுமான் வரமறுத்துவிட்டார். இதனால் கோபம் கொண்ட கருடாழ்வார் அனுமாருடன் சண்டை செய்தார். ஆனால் அனுமார் கருடாழ்வாரைவிட பாதாளத்தில் இருந்து ஆகாசம் வரை விஸ்வரூபம் எடுத்து கருடனைப் பயமுறுத்தி அனுப்பிவிட்டார். தனது தோல்வியை ஒப்புக்கொண்ட கருடாழ்வார் இங்கு மணிமண்டப க்ஷேத்திரம் வந்து தனக்கு ஏற்பட்ட கர்வ பங்கத்தை ஸ்ரீகிருஷ்ணரிடம் இவ்வாறு முறையிடுவதுபோல் கருடாழ்வார் சிலை அமைக்கப்பட்டிருப்பது இங்கு விசேஷம். அப்போது ஸ்ரீகிருஷ்ண பகவான் கருடனிடம் மற்ருெரு முறை இமாலயம் சென்று இங்கு மணிமண்டப க்ஷேத்திரத்தில் ஸ்ரீராமர் மற்றும் சீதாதேவியினை காண வருமாறு கூறும்படி கட்டளையிட்டார். அப்பொ

ழுது சத்ய பாமாவுக்கும் பாடம் புகட்ட எண்ணிய கிருஷ்ணபகவான் சத்யபாமாவை சீதாதேவிபோல் அனுமனுக்கு ஜாம்பவானுக்கும் தரிசனம் கொடுக்கக்கூறினார். ஆனால் எவ்வளவு முயன்றும் சத்யபாமாவால் சீதாதேவியைப் போல தரிசனம் கொடுக்க இயலவில்லை. கருடாழ்வாரும் மற்ருெரு முறையாக இமாலயம் சென்று அனுமானிடம் மணிமண்டப க்ஷேத்திரத்திற்கு ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியையும் ஸ்ரீசீதாதேவியையும் காணவருமாறு வேண்டினார். உடனே சந்தோஷமாக ஒப்புக்கொண்டு அனுமார் மணிமண்டப க்ஷேத்திரத்திற்கு வந்தார். அங்கு எவ்வளவு முயன்றும் சீதாதேவியாக மாறமுடியாமல் இருந்த சத்யபாமாவை சீதையாக ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். உடனே ஸ்ரீகிருஷ்ண பகவான் ருக்மணியிடம் அனுமாருக்கு ஸ்ரீசீதாதேவியாக தரிசனம் அளிக்குமாறு வேண்டினார். அந்த க்ஷணம் ருக்மணி பக்தி சிரத்தையுடன் ஸ்ரீகிருஷ்ணபகவானின் பாத கமலங்களைத் தொட்டு வணங்கினார். உடனே அழகு மிளிர சௌந்தர்யமான ஸ்ரீசீதாதேவியாக மாறியதாக புராணங்கள் கூறுகின்றன. ஆதலினால்தான் ருக்மணிதேவிக்கு சௌந்தர்யவல்லி என்ற பெயரோடு ஸ்ரீகிருஷ்ணஸ்வாமி கோயிலுக்கு வலப்புறத்திலே தனியாக கோயில் அமைந்துள்ளது இந்த க்ஷேத்திரத்தின் மகிமையாகும். ஸ்ரீசௌந்தர்ய வல்லித்தாயார் மஹாலக்ஷ்மியின் அவதாரம் ஆகும். இங்குதான் சத்யபாமாவிற்கும் கருடாழ்வாருக்கும் கர்வ பங்கம் ஏற்பட்டதாக கருடபுராணம் மற்றும் பாகவதம் முதலிய புராணங்கள் கூறுகின்றன.

ஸ்ரீகிருஷ்ணபகவான், அனுமார், ஜாம்பவான் முதலியோருக்கு ஸ்ரீகோதண்டராமஸ்வாமியாக தரிசனம் கொடுத்த காரணத்தினால் இங்கு பிரதானமான கிருஷ்ண ஸ்வாமியின் கோயிலுக்கு இடதுபுறம் தனியான த்வஜஸ்தம்பத்துடன், அழகுடன் ஸ்ரீகோதண்டஸ்வாமி கோயில் உள்ளது. இங்கு சீதாதேவி வலப்புறம் காட்சியளிக்கிருர். எங்கும் காணமுடியாத வண்ணம் ஒரே புண்ணிய க்ஷேத்திரத்தில் ஸ்ரீராமருக்கும் ஸ்ரீகிருஷ்ணருக்கும் வேறுவேறு த்வஜஸ்தம்பங்களு

டன் தனித்தனியாக கோவில் கள் இருப்பது இந்த க்ஷேத் திரத்தின் மற்றொரு சிறப்பாகும். இது ஸ்ரீராம ஸ்ரீகிருஷ்ணவதார சங்கமத்தை உறுதி செய்வதாக உள்ளது. மற்றும் ஸ்ரீமத்ராமா யண ஸ்ரீமத்பாகவத ஐக்கி யத்தை தெரியப்படுத்துகிறது.

ஸ்ரீகோதண்டராமஸ்வாமி கோவிலின் முன் உள்ள த்வஜஸ்தம்பத்திற்கு அரு காமையில் ஒரு குகை இருப் பதாகவும் அங்குதான் ஸ்ரீஜாம் பவான் தன் மகள் ஜாம்பவ தியுடன் வாழ்ந்து வந்ததா கவும் ஸ்தல புராணம் தெரி யப்படுத்துகிறது. இந்த கிரா மத்தைச் சேர்ந்த இளைஞர் களும் தொல்பொருள் ஆய்வா ளர்களும் குகையைச் சோதனை செய்து, சுவாசத்திற்குத் தேவை யன காற்று இல்லாததால் குகையின் நுழைவு வாயிலை மூடிவிட்டதாகத் தெரிகிறது.



இந்தக் கோயிலின் பின்புறம் க்ஷேத்திரபாலகனான ஸ்ரீஜாம் பவான் கோயில் இருக்கிறது. இங்கு ஜாம்பவானின் ஒன்ப தரை அடி உயரம் அஜானுபா குவான காட்சியானது பார்ப் பவர் உள்ளத்தில் ஆச்சரியம், வீரம், தைரியம் ஆகிய உணர்ச் சிகளை ஊட்டுவதாக இருக்கி றது. ஸ்ரீஜாம்பவான் ஏழு சிரஞ்சீவிகளில் ஒருவர். உலகத் திலேயே ஸ்ரீஜாம்பவானுக்குத் தனியாக ஒரு சிறந்த கோயில் இருப்பது இந்த க்ஷேத்திரத்தில் தான்.

இது தவிர இங்கு ஸ்ரீவேங் கடேஸ்வர, ஸ்ரீஆண்டாள், ஸ்ரீஆஞ்சநேயர், ஸ்ரீராமானுஜர் மற்றும் ஆழ்வார்களுக்கு என்று தனிச் சன்னிதிகள் இருக்கின் றன.

இங்குதான் ஸ்ரீசத்யபாமா ஜாம்பவதி சமேதராக சதுர்பு ஜம் ஸ்ரீகிருஷ்ணபகவான் சங்கு சக்கரத்துடன் புல்லாங்குழல் வாசிக்கும் வண்ணம் திரிபங்கி என அழைக்கப்படும் ஒய்யாரக் கண்ணனாக மல்லஹரி கிருஷ் ணனாகக் காட்சி அளிக்கிறார்.

ஸ்ரீகிருஷ்ண சந்நிதியின் முன் ஜயவிஜய த்வாரபாலகர்களு டன் சுக்ரீவ ஜடாயுவிக்ரஹங் கள் இருப்பது ஸ்ரீமத்ராமாயண ஸ்ரீபாகவத காவ்யங்களின் ஒரு மைப்பாட்டை உணர்த்து க்ஷேத் ரம் இம் மணிமண்டப க்ஷேத்ரம் என்பதை உறுதிப்படுத்துகிறது.

இந்த க்ஷேத்திரத்தைப் பற்றி கருடபுராணம், பிரம்மாண்ட புராணம் மற்றும் ஸ்ரீமத் பாக வதத்திலும் ஸ்யமந்தக உபாக்கி யானத்திலும் அறியலாம். தமி ழில் வைணவ அடியார் பெரியவாச்சான்பிள்ளை அவர் கள் இந்த க்ஷேத்ரமஹிமை

யைப் பாடியதாக அறியமுடிகிறது. தெலுங்கு மொழியில் மிகச் சிறந்தகவிகளான ஸ்ரீபைடிபாடி வேங்கடநரசிம் மகவி 'ஸ்ரீகோதண்டராம சதகம்', 'ஸ்ரீமன்னார் கிருஷ்ண சதகம்' என்ற கிரந்தங்கள் எழுதி ஸ்ரீகிருஷ்ண பகவானுக்கு அர்ப்பணம் செய்தார். மற்றும் ஒரு சிறந்த தெலுங்கு கவியான நாராயண கவியும் தனது ஹம்ச விம்சதி என்ற கிரந்தத்தில் 4 வது அத்தியாயத்தில் அழகு மன்னார் போளூர் மல்லாரி கிருஷ்ண ஸ்வாமியை கோவிந்தனாக கானம் செய்துள்ளார். அதேபோல் 5வது அத்தியாயத்தில் கலை அழகு மிக்க இந்த புண்ணிய க்ஷேத்ரம் அவரது காலத்தில் திருத்தணி ஸ்ரீகாளஹாஸ்தி திருப்பதி போன்ற புண்ய க்ஷேத்திரங்கள் போன்றும் பக்தர்கள் கூட்டம் நிரம்பிவழிந்ததாகவும் மிகப்பெரிய புண்யக்ஷேத்ரமாக திகழ்ந்ததாகவும் எழுதியுள்ளார்.

இந்தக் கோவிலின் விமானம் திருப்பதி வேங்கடேஸ்வர ஸ்வாமி கோவில் விமானம் போல் அமைந்துள்ளது. சாதாரணமாக வைஷ்ணவக்கோவில் விமானங்களில் கருட பிம்பங்களைக் காணலாம். ஆனால் மன்னார் போளூர் கோவிலிலும் திருப்பதி கோவிலிலும் சிம்ம பிம்பங்களும் நரசிம்ம பிம்பங்களும் காணவிருப்பது ஒரு சிறந்த அம்சமாகும்.

இந்தப் புண்ணிய க்ஷேத்ரம் ஸ்ரீகாஞ்சி பரமாசார்யாளின் அபிமான க்ஷேத்ரமாகும். ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதுகளில் காஞ்சிபுரம் பரமாசார்யார் இருமுறை இங்கு சாதுர்மாஸ்ய விரதம் அனுஷ்டித்தது குறிப்பிடத்தக்கது.

இங்கு உறையும் அழகு மல்லாரி கிருஷ்ண ஸ்வாமி மக்களின் அனைத்துக் கவலைகளையும் தீர்த்து மனத்திற்கு அமைதியையும் சகல சௌபாக்கியங்களையும் அளிப்பதாக இங்குள்ள மக்கள் கூறுகிறார்கள்.

சரித்திரம் புகழ்பெற்று சிற்பக் கலைகளில் சிறந்து ஓங்கி காவ்யப் புகழ்பெற்று மணி மண்டப க்ஷேத்ரம் என்று புராணங்களில் பேசப்பட்டுவரும் மன்னார் போளூர் ஸ்ரீஅழகுமல்லாரி கிருஷ்ணஸ்வாமி கோயில் இன்று பாழடைந்த சிதிலமான நிலையில் இருப்பது மிகவும் வருத்தத்திற்கு உரியதாகும். இதுபோன்ற சிறப்பு வாய்ந்த சரித்திரச் சின்னங்களைப் பாதுகாத்து நிலைநிறுத்துவது பொதுமக்கள் மற்றும் அரசாங்கத்தின் தலையாய கடமையாகும்.

* * *

# பிரதோஷ மகிமையும் வழிபாடும்

திரு. தி. இராசமாணிக்கம் - பொள்ளாச்சி.

"இன்ன உரு என்று அறி ஒண்ணுதான்" என்ற அப்பர் பெருமானது திருவாக்கிற் கேற்ப, இத்தன்மையவன் எனக் கூற இயலாதவன் இறைவன். இருப்பினும் "வடிவும் ஆயிரம் உடையார்; வண்ணமும் ஆயிரம் உடையார்" என்பர் ஞான வேந்தர். இத்தகு இறைவடிவங்களில் ஒன்று சிவமூர்த்தி. சிவபெருமானுக்கு உரிய விரதங்களான சிவராத்திரி, பிரதோஷம் ஆகியவற்றில் தலையாய விரதம் பிரதோஷ விரதமாம்.

## புராண வரலாறு :

இறவாமையை அடைய அமிர்தம் வேண்டி வானவர்களும் அசுரர்களும் ஒரு காலத்தில் பாற்கடலைக் கடைந்தனர். மந்திர மலையை மத்தாகவும், சந்திரனைக் கடைத்தறியாகவும், வாசுகி என்ற பாம்பைக் கயிருகவும் கொண்டு கடைய, திருமால் ஆமை வடிவில் மத்தைத் தாங்கிக் கொண்டிருந்தான். இதனை மங்கை மன்னன்,

"செருமிகுவாள் எயிற்று அரவு
ஒன்று சுற்றித்
திசைமண்ணும் விண்ணும் உடனே
வெருவர வெள்ளை வெள்ள-
முழுதுங் குழம்ப
இமையோர்கள் நின்றுகடைய
பருவரையொன்று நின்று
முதுகிற் பரந்து
சுழலக்கிடந்து துயிலும்
அருவரையன்னதன்மை அடல்
ஆமையான திருமால்" [11-4-2]

என அழகுறக்கூறியுள்ளார். அமிர்தத்திற்குப் பதிலாக வாசுகி கக்கிய ஆலமும், கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து ஆலாலம் என்ற கொடிய விஷம் தோன்றிற்று. அதன் வேகத்தால் வெண்ணிறமாக இருந்த திருமால் நீலநிறமானான். ஆலாலம் வெப்பத்துடன் பயங்கரமாகத் தேவர்களை இடமாகவும் வலமாகவும் மறித்துத் துரத்த, அவர்கள் நடுநடுங்கித் திசைகள் தோறும் சிதறி ஓடினார்கள். எல்லோரும் தங்களைக் காக்க மனம் ஒன்றிய நிலையில் சிவபெருமானைத்துதித்த நேரம்தான் பிரதோஷகாலமாகும்.

தம் நலன் ஒன்றேயே கருத்தில் கொண்டு இறைவனை மறந்து இமையோரும் ஏனையோரும் கடலைக் கடைய, அமிர்தத்திற்குப் பதில் நஞ்சு எழுந்தது. அவ்வமயம் அவர்கள் இறைவனிடம் அடைக்கலம் அடைய அவன் அவர்தம் குற்றங்கருதாது அவர்களைக் காக்க திருவுள்ளம் கொண்டான். தம் அருகில் நின்ற சுந்தரரை ஏவ, அவர் விஷத்தை நாவற்பழம் போன்று திரட்டி இறைவனிடம் கொடுத்தார். பெருங்கருணைக் கடலான இறைவன் நந்தியின் கொம்புகளுக்கு இடையில் தோன்றி, அதை உண்டருளினான். விஷம் உள்ளே சென்ருல் உள் முகத்தில் உள்ள உயிர்கள் அழியும்; வெளியே உமிழ்ந்



தால், வெளியில் உள்ள ஆருயிர்கள் இறந்துவிடும்; எனவே இறைவன் அதை உண்ணுமலும், உமிழாமலும் அன்னை பராசக்தி மற்றும் தேவர்களின் வேண்டுகோளின்படி, கண்டத்தில் நிறுத்த, செம்மேனி எம்பெருமானின் கழுத்து நீல நிறமாயிற்று. அதனால் நீலகண்டன் என்ற பெயரினைப் பெற்ருன். இது இறைவனது அருட் தன்மை, அளக்கலாகா பேராற்றல் மற்றும் முழு முதற்தன்மை ஆகியவற்றை உணர்த்துகிறது. இவ்வாறு இறைவன் ஆலகாலவிடத்தை உண்டருளியது ஏகாதசி மாலை நேரமாகும்.

இறைவனது ஆணையின்படி, தேவர்களும் அசுரர்களும் ஏகாதசியாகிய அன்று இரவு முழுவதும் உறங்காது கடலைக் கடைந்தனர். மறுநாள் துவாதசி காலையில் அமுது தோன்றியது. அந்தமகிழ்ச்சியால் எல்லோரும் ஆடியும் பாடியும் கொண்டாடினர்.

விஷத்தை உண்டருளிய சிவபெருமானின் திருவுருவம் "விஷபாஹரணமூர்த்தி" எனப்பெறும். இது சிவபெருமானின் மகேசுவர வடிவங்கள் 25ல் ஒன்று. இந்த வடிவம் திருக்கோயில்களில் அரிதாகத்தான் காணப்படுகிறது. உதா்ரணமாக சென்னையினின்றும் நாகலாபுரம் செல்லும் வழியில் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த சுருட்டப்பள்ளி என்ற தலத்தில் சிவபெருமான் விஷத்தை உண்ட மயக்கத்தால் திருமாலைப் போன்று பள்ளி கொண்ட பெருமானாகக் காட்சி அளிக்கின்ருன். இத்தகைய திருக்கோலம் வேறு எங்கும் இல்லை.

## பிரதோஷம் :

"பிர" என்ருல் அளவு கடந்த தன்மை என்பதுபொருள்; தோஷம் என்ருல் தீமை; எனவே பிரதோஷகாலம் என்ருல் நஞ்சு தோன்றியதால் அனைவருக்கும் ஏற்பட்ட அளவிடற்கரிய துன்பம் உண்டான காலத்தை உணர்த்தும்.

தேவர்கள் சிவபெருமானை வணங்கி தங்களது குற்றத்தைப் பொறுத்தருளுமாறு வேண்டியது திரியோதசியாகும். சிவபெருமான் அன்று பிரதோஷவேளையில் (அதாவது மாலை 4-30 மணி முதல் 6 மணி வரை) நந்தி தேவரின் இருகொம்புகளுக்கு இடையில் நின்று அம்பிகை காண திருநடனம் செய்தருளினான். அவ்வயம் சரசுவதிதேவி வீணை வாசித்தாள்; இந்திரன் புல்லாங்குழல் ஊதினான்; பிரமா தாளம் போட, இலட்சுமிதேவி பாட, திருமால் மிருதங்கம் வாசிக்க, தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், திக்கு பாலகர்கள் ஆகிய அனைவரும் வந்து இறைவனை வணங்கினர்.

இது ஐந்து வகைப்படும். அவை:

### 1. நித்யப் பிரதோஷம் :

தினசரி மாலை சூரியாஸ்தமனத்திற்கு மூன்றேமுக்கால் நாழிகைகள் முன்பிருந்து பின் மூன்றேமுக்கால் நாழிகைகள் வரை ஆக ஏழரை நாழிகை காலம்.

### 2. பக்ஷ பிரதோஷம் :

சுக்லப்பக்ஷ திரியோதசியில் வருவது பக்ஷ பிரதோஷம்.

### 3. மாத பிரதோஷம் :

ஒவ்வொரு மாதமும் வளர்பிறை தேய்பிறை திரியோதசியில்வருவது மாத பிரதோஷமாகும்.

### 4. மகா பிரதோஷம் :

இது மூன்று வகைப்படும். அவை:

அ) உத்தம மகாபிரதோஷம் : சித்திரை, வைகாசி, ஐப்பசி, கார்த்திகை ஆகிய மாதங்களில் வளர்பிறை திரியோதசியுடன் கூடிய சனிக்கிழமைகளில் வருவது.

ஆ) மத்திம மகாபிரதோஷம் : மேலே குறிப்பிட்ட மாதங்களில் தேய்பிறை திரியோதசியுடன் கூடிய சனிக்கிழமைகளில் வருவது.

இ) அதம மகாபிரதோஷம் : ஏனைய 8 மாதங்களில் வளர்பிறை, தேய்பிறை திரியோதசியுடன் கூடிய சனிக்கிழமைகளில் வருவது.

### 5) பிரளய பிரதோஷம் :

எல்லா உயிர்களும் சிவபெருமானிடம் ஒடுங்கிவிடும் காலம்.

## வழிபாட்டு முறைகள் :

அன்று அதிகாலையில் குளித்துத் தூய ஆடைகளை அணிய வேண்டும். இல்லத்தைச் சாணமிட்டு மெழுகி, கோலமிடவேண்டும். நாத்தழும்பேற திருமுறைகளை ஓத வேண்டும். பிரதோஷ காலத்தில் சிவாலயத்தில் "ஓம் நமசிவாயா" என்ற ஐந்தெழுத்து மந்திரத்தை காதலாகிக் கசிந்து உருகிக் கண்ணீர் மல்க ஓதவேண்டும்.

அன்று தண்ணீர் அடிக்கடி குடிக்கவோ அல்லது பகலில் தூங்கவோ கூடாது. வெற்றிலை, பாக்கு, புலால் உண்பது, சிற்றின்பம் துய்ப்பது ஆகியவற்றை விலக்க வேண்டும்.

சிவகணங்களுக்கு நந்திதேவர் தலைவராக விளங்குபவர். அவர்தான் முதலில் தேவர்களின் குறைகளைக் கேட்டு சிவபெருமானிடம் விண்ணப்பித்து, அவற்றைப்போக்க வழிசெய்பவர். எனவே பிரதோஷ காலத்தில் அவருக்கு முதலில் பூஜை செய்ய வேண்டும் என காரணாகமத்தில் கூறப்பட்டுள்ளது. நந்தியெம்பெருமானை வணங்குவதன் மூலம் இறைவனது அருளை முழுமையாகப் பெறலாம்.

நந்தி தேவருக்கு அறுகம்புல் மாலை அணிவித்து, நெய்விளக்கிட்டு, வெல்லம் கலந்த சிவப்பு அரிசியை நிவேதனம் செய்ய வேண்டும். வில்வத்தளத்தால் அவரை அலங்காரமும், அர்ச்சனையும் செய்யவேண்டும்.

சப்ததீர்த்தங்களும் அடங்கிய அண்டத்தைத் தொட்டுக் கொண்டுள்ள நந்திதேவரின் இருகொம்புகளுக்கு இடையில் சிவலிங்க மூர்த்தியைத் தரிசித்து வணங்கவேண்டும்.

ஆலகால விஷம் வானவர்களை முன்னும், பின்னும் இடமாகவும், வலமாகவும் துரத்தியது. இவ்வாறு தேவர்கள் இடமாகவும் வலமாகவும் வந்தது "சோமசூக்த பிரதக்ஷணம்" எனப்பெறும். பிரதோஷ காலத்தில் இம்முறையில்தான் இறைவனைப் பிரதக்ஷணம் செய்ய வேண்டும்.

"சோமசூக்த பிரதட்சணம்" என்பது முதலில் சிவலிங்கத்தையும் நந்திதேவரையும் வணங்கி விட்டு, பிரதட்சணமாக சண்டேசுவரர் சந்நிதி வரை சென்று அவரை வணங்க வேண்டும். அதன் பின் அப்படியே திரும்பி வந்து, முன்போல் இறைவனையும் நந்திதேவரையும் வணங்கிவிட்டு, பிரதட்சணமாக சுவாமி அபிஷேக தீர்த்தம் விழும் நிர்மாலிய தொட்டி வரை வரவேண்டும். நிர்மாலிய தொட்டியைக்கடக்காது திரும்பி அப்பிரதட்சணமாக சந்நிதிக்கு வந்து இறைவனையும் நந்திதேவரையும் வணங்கவேண்டும். இவ்வாறு மூன்று முறை செய்ய வேண்டும்.

சோமாஸ்கந்த மூர்த்தியை (இறைவன் மற்றும் இறைவி, இவர்களுக்கு
இடையில் குழந்தை வடிவில் முருகன்) வணங்க வேண்டும். இறைவன் ஆற்றலின் திருவுருவம் என்றால், அன்னை அருளின் வடிவம்; விடை தருமதேவதை. இறைவன் இறைவியுடன் விடைமேல் ஆலயத்தை மும்முறை வலம் வருவதைக் கண் குளிரக் கண்டு போற்றித் துதிக்கவேண்டும்.

## தத்துவம் :

பிரதோஷகாலத்தில் இறைவனிடம் எல்லாம் ஒடுங்கிவிடுகின்றன. எனவே மனம் இறைவனிடம் ஒன்றி ஈடுபட இதுவே நல்லநேரம்; இது சிவநாமத்தை உச்சரிக்க நல்ல நேரமாம்.

## பலன்கள் :

பிரதோஷ விரதத்தைக் கடைப்பிடித்து ஒழுகுவதால், பாவங்கள் வலகி புண்ணியம் உண்டாகிறது. சகல செல்வயோகமிக்க பெருவாழ்வினைப் பெறலாம். மூன்று முறை "சோமசூக்த பிரதட்சணம்" செய்வதால், அநேக அசுவமேத யாகங்கள் செய்த பலன்கள் கிடைக்கும். சோமாஸ்கந்த மூர்த்தியை வணங்குதவன்மூலம் இந்திரனுக்கு நிகரான புகழ் கிடைக்கிறது. அடியார்களை ஆட்கொள்ளும் போதெல்லாம், இறைவன் இறைவியுடன் இடப ஊர்தியாக வெளிப்படுவதாக திருத்தொண்டர் புராணம், வில்லி பாரதம் போன்ற இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. இத்தகு சிறப்புமிக்க மூர்த்தியை வணங்கினால், ஆயிரம் அசுவமேத யாகங்கள் செய்தபலன்கள் கிடைக்கின்றன. பிரதோஷ காலத்தில் தேவர்கள் அனைவரையும் வணங்கும் பேறு கிடைப்பதால், கல்வி, செல்வம் முதலிய நற்பலன்கள் உண்டாவதுடன், கடன், வறுமை, வியாதி, பயம், மனக்கவலை, மரண வேதனை ஆகிய துன்பங்கள் நீங்கப்பெறும். இந்த நேரத்தில் சிவாலயத்தில் செய்யப்பெறும் காரியங்கள் ஒன்று பலவாகி அளவற்றதாகப்பெருகும்.

பிரதோஷ வழிபாட்டை முறையாகத் தவறாது செய்து வந்த விதர்ப்ப நாட்டு இளவரசன் தர்ம குப்தன் தந்தையால் தனக்கு ஏற்பட்ட தோஷம் நீங்கப்பெற்று, தான் இழந்த நாட்டை மீட்டான்; கந்தர்வ கன்னி அம்சுமதியை மணந்தான். அவனை வளர்த்த விதவையான அந்தணப்பெண்ணும் அவள் மகனும் அரண்மனை வாழ்வு பெற்றனர்.



# புனல் பாடும் புண்ணியன்

திரு. ஆர்.டி. சாரி - சென்னை.

திராவிட வேதம் என்றும், தமிழ்மறை என்றும் வழங்கும் நாலாயிரத் திவ்வியப்பிரபந்தம் ஒப்பும், மிக்கும் இல்லாத செந்தமிழ்ப் பொற்களஞ்சியம் பன்னிரு ஆழ்வார்களின் இந்தப் படைப்புக்களை சாதாரண கவிதைகளாக எண்ணாது, உப நிடதங்களின் சாரமாகவும், ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்களின் சாரமாகவும் போற்றினர் நம் முன்னோர்கள்.

இந்த ஆழ்வார்களின் பாடல்களின் தெள்ளிய தமிழ் துள்ளி விளையாடும்; பக்தி மழை ததும்பும்; பரந்தாமனைவிட, பரந்தாமனின் பக்தர்களைத் துதித்தாலே பரந்தாமனைத் துதித்தப்பெருமை கிட்டும் என்னும் பண்பாடு மிளிரும்.

நதிகள் நம் மனிதகுல வாழ்க்கையின் ஜீவநாடி. மனித குல கலாச்சாரமும், மேம்பாடும், இலக்கியப் படைப்புக்களும், இசையும், நாடகமும் நதியோர கலாச்சாரங்களில் உருவாகி சிறப்புப் பெற்றது. யாமறிந்த வகையில் ஆழ்வார்களின் பாடல்களில் போற்றப்படுகின்ற புண்ணிய நதிகளாவன:

கங்கை, யமுனை, காவிரி, பெண்ணையாறு, கருடநதி, 'நிவா' என்கிற வெள்ளாறு, பொன்னியின் கிளை நதிகள், தாமிரபரணி, திருச் செங்குன்றூர், திருசிற்றாறு, சிலம்பாறு, ஆகாசகங்கை, பாபவிநாசம், குமாரதாரா.

இந்த நதிகளையும், இந்த நதிகளின் கரைகளிலே கோயில் கொண்டிருக்கும் இறைவனையும் ஆழ்வார்கள் பாடியதை அனுபவித்து அவற்றை எடுத்துரைக்க விரும்புகின்றேன்.

ஆழ்வார்களிலே திருமங்கை மன்னன் என்றும், கலியன் என்றும், பரகாலன் என்றும், மங்கையர்கோன் என்றும், குறையலூர் **வாழ்வேந்தன் என்றும் பற்பல** பெயர்கள் பெற்ற திருமங்கையாழ்வார் இந்தப் புனிதத் நாயகமாம் பாரத நன்னாட்டில் இமயம் முதல் குமரி வரை சென்று ஆங்காங்கே கோயில் கொண்டிருக்கும் கோவிந்தனைப் பாடி மகிழ்ந்துள்ளார்.

"திருவதரி" என்றும், "பத்ரி", 'பத்ரிகாசிரமம்" என்றும் வழங்கும் திவ்வியத்தலத்திலே,

"தேனமர் சோலைக் கற்பகம் பயந்த
தெய்வநன் னறுமலர் கொணர்ந்து
வானவர் வணங்கும் கங்கையின்
கரைமேல்
வதரியாச் சிரமத்துள் ளானே"



என்று ஸ்ரீமந்நாராயணனைப் பாடி மகிழ்ந்துள்ளார்.

அவர் பாடிய இனனும் ஒரு அடியில்

"அந்தரத் தமரர் அடியிணை வணங்க
ஆயிர முகத்தினா லருளி
மந்தரத் திழிந்த கங்கையின்
கரைமேல்
வதரியாச் சிரமத்துள் ளானே"

என்று நாராயணனை ஆயிரம் முகத்தில் கண்டு மகிழும் சிறப்புப் போற்றற்குரியது.

வடநாட்டுத் தலங்களான திருப்பிரிதி, திருவதரி, சாளக்ராமம், சிங்கவேள்குன்றம் போன்ற தலங்களைப்பாடித் தென்னாட்டிற்கு வந்த கலியனின் பாடலில்,

"தெண்ணிறைச் சுனைநீர் அருவி
பாயும் திருவேங்கடம்"

பற்றிக் குறிப்பிடும் போது,

பொங்குநீர் செங்க யல்திளைக்கும்
சுனைத்திருவேங்கடம்
அடை நெஞ்சமே"

என்று குமாரதாரா, பாபவினாசனம், ஆகாசகங்கை மற்றும் பல அருவிகளையும், அருவிகளின் நாதனான திருவேங்கடமுடையானையும் கண்முன் கொணர்கிறார்.

பின்னர் நடுநாட்டுத் திருத்தலங்களில் சிறப்புமிக்க திருக்கோவிலூரைப் பாடும்போது திருமங்கையாழ்வார் பெண்ணை நதியைப் போற்றுகின்றார்.

"துஞ்சாநீர் வளஞ்சுரக்கும்
பெண்ணைத் தென்பால்
தூயநான் மறையாளர்
சோமுச் செய்ய
செஞ்சாலி விளைவயலுள் திகழ்ந்து
தோன்றும்
திருக்கோவலூர் அதனுள்
கண்டேன் நானே"

என்று உலகளந்த பெருமானை அந்தப் பெண்ணைநதிக்கரையில் பாடி மகிழ்கிறார்.

கருடநதி ஆற்றின் கரையில் அமைந்த திருக்கோயிலான திருவயிந்திரபுரத்தில் தேவர்களுக்கு எல்லா நாதனான தேவநாதனைப் பாடி மகிழும் போது,

"வரைவ ளந்திகழ் மதகரி மருப்பொடு
மலைவள ரகிலுந்தி
திரைகொணர்ந்தணை செழுநதி
வயல்புகு
திருவயிந் திரபுரமே"

என்று குறிப்பிடுகிறார்.

இன்று சிதம்பரம் என்று வழங்கும் தில்லைத் திருச்சித்திரக்கூடத்தில் கோவிந்தராஜப் பெருமாள்கோயில் கொண்டிருக்கிறார். தில்லைத் திருச்சிற்றம்பலம் நடராஜர் கோயிலும் இதனுடன் ஒன்றாக அமைந்து திகழ்கிறது. இந்தத் தில்லைநகர் திருச்சித்திரக்கூடத்தைப் பாடுகின்ற திருமங்கையாழ்வார்,

"பிளிருகின்ற யானைகளின் கொம்புகளையும், மலையிலுள்ள மணம் கமழ்கின்ற சந்தன மரங்களையும், தள்ளிக்கொண்டு 'நிவா' என்கிற வெள்ளாறு சுற்றிலும் பாய்கின்றதும், புண்ணிய தீர்த்தங்களால் சூழப்பட்டு, அழகான திருசித்திரக் கூடம் தன்னில் அலர்மேல் மங்கை உறைமார்பில் உடைய பெருமானை நெஞ்சிலே கொள்ளுங்கள்" என்று பாடுகின்றார்.

"மௌவல் குழலாய்ச்சி மென்தோள்
நயந்து
மகரஞ்சுழலச் சுழல்நீர் பயந்த
தெய்வத் திருமா மலர்மங்கைதங்கு
திருமார்பனைச் சிந்தையுள்
வைத்துமென்பீர்"

இதே பத்தில் மற்றொரு பாடலில்,

"பெருநீர் நிலாவுந்தி முத்தம
கொணர்ந்து
எங்கும் வித்தும் வயலுள்
கயல்பாய்ந்துகள"

ஓடும் சித்திரக்கூடமே என்று பாடுகின்றார்.

திருச்சித்திரக்கூடம் கண்டு, கங்கையிலும் புனிதமாகிய காவிரி பாயும் சோழ வள நன்னாட்டிலே காவிரிப்புனல் பாய்ந்து செழித்துக் கொழித்த பூம்பொழில்கள் கொண்ட வயல்சூழ் காழிசீராம விண்ணகரமும், வயலாளி திருவாலியும், திருநாங்கூர் மணி மாடக்கோயிலும், திருநாங்கூர் வைகுந்த விண்ணகரமும், திருநாங்கூர் அரிமேய் விண்ணகரமும், திருநாங்கூர் திருத்தேவனார் தொகையும் , திருவண்புருடோத்தமும், திருநாங்கூர் செம்பொன் மாடக்கோயிலும், திருநாங்கூர் திருத்தெற்றி அம்பலமும், திருவெள்ளக்குளமும், காவளம்பாடியும், திப்பார்த்தன்பள்ளியும், பரந்த நீர்பாயும் பொன்னியின் தென்பால் உள்ள திருவள்ளியங்குடியும், திருப்புள்ளம் பூதங்குடியும் தனித்தனியே எண்ணி சுவைப்போம்.

சிங்கங்களால் வீழ்த்தப்பட்ட யானைகளின் தந்தங்களையும், அகில்மரங்களையும், அழகிய முத்துக்களையும், வெளுத்த சாமரங்களையும், மலையிலே தோன்றிய மற்றப்பொருட்களையும், அலைகினாலேயே தள்ளிக்கொண்டு பெருகப்பெற்றக் காவிரி வளம் தருகின்ற திருநாங்கூர் மணிமாடக்கோயிலை வணங்க வாரீர் என்கின்றார்.

பின்னர் திருநாங்கூர் திருத்தேவனார் தொகை என்னும் திருப்பதியைப் பாடும்போது, மண்ணியாற்றின் தென்கரையில் மேல் குடிகொண்ட தெய்வ நாயகனை,

"போதலர்ந்த பொழிற்சோலைப்
புறமெங்கும் பொருதிரைகள்
தாதுதிர வந்தலைக்கும்
தடமண்ணித் தென்கரைமேல்
மாதவன்ரு துறையுமிடம்
வயல் நாங்கை வரிவண்டு
தேதெனவென் றிசைபாடும்
திருத்தேவனார் தொகையே"

என்று விளிக்கின்றார்.

இன்னொரு பாடலிலும் மண்ணியாற்றையும், அதன் தென் கரை மேல் மிகப் பலசாலிகள் வாழ்கின்ற திருத்தேவனார் தொகையையும் பாடியிருக்கின்றார்.

திருநாங்கூர் வண்புருடோத்தமன் திருக்கோயிலைப்பாடும் போது,

"கங்கைபோதரக் கால் நிமிர்ந்தருளிய
கண்ணன் வந்துறை கோயில்"

என்று பாடுகின்றார்.

அதாவது கங்கை நதியானது பெருகும்படியாகத் திருவடியை உயர நீட்டிய கண்ணன் வந்துறையும் கோயில் என்று பொருள் படுகிறது.

திருநாங்கூர்த் திருத்தெற்றியம்பலம் செங்கண்மாலைப் பாடுகிறார்.

"மடலெடுத்த நெடுந்தெங்கின்
பழங்கள் வீழ
மாங்கனிகள் திரட்டுருட்டா
வருநீர்ப்பொன்னி"

இதன் பொருளாவது: பாளை உயர்ந்துள்ள தென்னை மரங்களின் காய்கள் விழ, காய்கள் நிறைந்துள்ள மாமரங்கள் மேல் அதுபட்டதும், மாங்கனிகள் பொன்னியில் விழ அதனை உருட்டிக்கொண்டும், பூக்கள் திரட்டிக்கொண்டும் பெருகுகின்ற காவிரி திருத்தெற்றியம்பலத்தைச் சூழ்ந்து வெள்ளம் போல் இருக்கின்றது.

திருநாங்கூர்த் திருமணிக்கூடத் திருப்பதியைப் பாடுகின்ற போது,

"பூம்புனல் பொன்னிமுற்றும் புகுந்து
பொன்வரண்ட, எங்கும்
தேம்பொழில் கமழும்நாங்கூர்த்
திருமணிக்கூடத்தானே"

என்று மணிக்கூட நாயகனை மகிழ்ந்து பாடுகிறார்.

அழகிய நீரையுடைய காவிரி என்னும் ஆறு பாய்ந்து பொற்குவியலைக் கொண்டு தள்ளப் பெற்றதும், அதன் அழகுமிக்க சோலைகள் பரிமளம் வீசப்பெற்றதுமான திருநாங்கூர் திருமாடக்கோயில் திருப்பதியிலே உள்ளவனே என்று பொன்னிக்கும் ஏற்றம் தந்து, பொன்னியின் நாயகனுக்கு ஏற்றம் தருகிறார்.

நான்காம் பத்து பத்தாம் திருமொழியில், திருவள்ளியங்குடி கோலவில்லி இராமப்பெருமானைப் பாடும் போது காய்கள் நிறைந்து ஓங்கி நிற்கின்ற பாக்கு மரங்களும், வாழை மரங்களும், தென்னை மரங்களும் சூழ்ந்து நிற்கின்ற சோலைகள் இடையே போதுமான நீர்பாய நிற்கின்ற மணியாற்றின் தென் கரையிலுள்ள திருவள்ளியங்குடியில் ஆலிலே துயின்ற எம் பெருமானை வாழ்த்துகிறார்.

ஐந்தாம் பத்து முதல் திருமொழியில் திருப்புள்ளம்பூதங்குடி வல்வில் இராமனைப் பாடும் போதும்,

"துன்னிமண்ணும் விண்ணும்
தோன்றுதிருளாய் மூடிய நாள்
அன்னமாகியருமறைகள் அருளிச்
செய்த அமலனிடம்
மின்னுசோதி நவமணியும் வேயின்
முத்தும் சாமரையும்
பொன்னும் பொன்னி கொணர்ந்-
தலைக்கும் புள்ளம்பூதங்குடிதானே"

ஒளிவிடுகின்ற நவரத்தினங்களையும், மங்கல முத்துக்களையும், சாமரங்களையும், பொன்னையும் தள்ளிக்கொண்டு வருகின்ற அலையலையாய்ப் பெற்ற காவிரி ஓடும் புள்ளம்பூதங்குடி இறைவனை அமலன் என்கிறார்.

பின்னர், திருவரங்கத்தமுதனைப் பாடும் போது,

"உந்திமேல் நான்முகனைப்
படைத்தான் உலகுண்டவ
னெந்தைபெம்மான் இமையோர்கள்
தாதைக்கு இடமென்பரால
சந்திநோடுமணியுங் கொழிக்கும்
புனல் காவிரி
அந்திபோலும் நிறத்தார்
வயல்சூழ் தென்னரங்கமே"

என்று கூறி மகிழ்கின்றார்.

திருமங்கை ஆழ்வாருக்குத் திருநறையூர் நம்பியின்பால் மிகுந்த பக்தியுண்டு. இந்த இறைவனே ஆழ்வாருக்கு பஞ்ச சமஸ்காரம் செய்து வைத்தார்.

"உழும்செறுவில் மணிகொணர்ந்து
கரைமேல் சிந்தி
உலகெல்லாம் சந்தனமும்
அகிலுங்கொள்ள
செழும்பொன்னி வளங்கொடுக்கும்
சோழன் சேர்ந்த
திருநறையூர் மணிமாடம்
சேர்மின்களே"

திருவழுந்தூரில் பரந்தாமனைப் பாடி மகிழும்போது பொன்னியின் புகழையும், அரங்கனின் பெருமையையும் கூறுகிறார்.

"குலத்தலைய மதவேழம்
பொய்கை புக்குக்
கோள்முதலை பிடிக்க, அதற்
கனுங்கி நின்று
நிலத்திகழும் மலர்ச்சுடரேய்
சோதி! என்ன
நெஞ்சிடர்தீர்த் தருளியென்
நிமலன் காண்மின்

"மலைத்திகழ்சந் தகில்கனக
மணியும் கொண்டு
வந்துந்தி வயல்கள்தோறும்
மடைகள் பாய,
அலைத்துவரும் பொன்னிவளம்
பெருகும் செல்வத்
தணியழுந்தூர் நின்றுகந்த
அமரர் கோவே"

பொன்னிக்கிளை நதிகள் பாயும் திருக்கண்ண மங்கை, திருக்கண்ணங்குடி, திருநாகை, திருக்கண்ணபுரம் பாடி மகிழ்ந்த பின்பு திருமங்கை மன்னன் திருமாலிருஞ்சோலை அருவிகளைப் பாடி மகிழும்போது,

"சந்தோடு மணியும் அணி
மயில் தழையும்
தழுவிவந் தருவிகள் நிரந்து
வந்திழி சாரல் மாலிருஞ் சோலை"

என்று திருமாலிருஞ்சோலை மலையையும், அழகரையும் வணங்குவோம் என்கிறார்.

எம்பெருமானுக்குப் பல்லாண்டு பாடிய விஷ்ணுசித்தன் என்னும் திருநாமம் கொண்ட ஆழ்வாரை, எம்பெருமானே இவருடைய பொங்கும் பரிவைக் கண்டு "பெரியாழ்வார்" என்னும் பட்டம் சூட்டி மகிழ்ந்து மகிழ்வித்தது ஒரு தனிச்சிறப்பு.

பெரியாழ்வாரின் பாடல்களில் புனித நதியான கங்கையைப் போற்றிய பாடலை முதலில் காண்போம்.

"திரைநீர்ச்சந்திரமண்டலம்போல்
செங்கண்மால் கேசவன் தன்
திருநீர்முகத்துத்துலங்குசுட்டி
திகழ்ந்தெங்கும்புடைபெயர
பெருநீர்த்திரையெழுகங்கையிலும்
பெரியதோர் தீர்த்தபலந்
தருநீர் சிறுச்சண்ணம்துள்ளம்சோரத்
தளர்நடை நடவானோ"

இமயமலைச் சாரலில் தேவப்பிரயாகை என்று இன்று வழங்கும் கண்டம் என்னும் கடிநகர் திருப்பதியின் பெருமையைப்பாடி நம்மை அங்கே அழைக்கிறார். ஓடிவருகின்ற கங்கையைக் கண்டதும் இத்தகைய அழகுமிகு இயற்கைக் காட்சியைக் காண்பதற்கே பிறவியெடுத்தோம் என்றால் மிகையாகுமோ?

ஏழாம் திருமொழி முதல் பாடலில் தேவப்பிரயாகையைப் பாடும்போது பெரியாழ்வார் சொல்கிறார்:

"தங்கையைமூக்கும் தமையனைத்-
தலையும் தடிந்த எம்தாசரதிபோய்
எங்கும்தன் புகழாவிருந்து அரசாண்ட
எம்புருடோத்தமனிருக்கை
கங்கைகங்கையென்ற வாசகத்தாலே
கடுவினைகளைந்திடுகிற்கும்
கங்கையின்கரைமேல் கைதொழநின்ற
கண்டமென்னும் கடிநகரே"

இந்தப் பத்துப் பாடல்களிலும் கங்கையைப் பற்றி மேலும் கூறும்போது,

"கலந்திழிபுனலால் புகர்படு கங்கை";
"கதிர்முகமணி கொண்டிழி
புனல்கங்கை"
"கமையுடைப் பெருமைக் கங்கை";
"அழுவிடும் பெருமைக் கங்கை";
"கலப்பைகள் கொழிக்கும்
கங்கையின் கரை";
"கற்பகமலரும் கலந்திழிகங்கை";
"கரைபுரைவேள்விப்புகை கமழ்கங்கை";
"கடலினைக் கலங்கக் கடுத்திழி
கங்கை";
"கான்தடம் பொழில்சூழ் கங்கை";
"பொங்கொலி கங்கை";

என்றெல்லாம் கங்கையையும், கங்கையின் கரைமேல் குடிகொண்ட குடி கண்டநகரத்தெம்மரன் நீலமேகப்பெருமாள் புருஷோத்தமனையும் சித்தரிக்கிறார்.

கங்கையைப்பாடி, கங்கையினும் புனிதமாகிய காவிரியைப் பாடும் போது தென்அரங்கன் கண்முன்னே நிற்பான். கண்டவர் கள்ளார் பொழில் அரங்கன் அடியார்களாகி எண்திசைக்கும் விளக்காகி நிற்பர்.

அப்பாசுரம் கீழ்வருமாறு:

"வண்டுகளித்திரைக்கும் பொழில்சூழ்
வருபுனல் காவிரித்
தென்னரங்கன்
பண்டவன் செய்த கிரிடையெல்லாம்
பட்டர்பிரான் விட்டுசித்தன்பாடல்
கொண்டிவைபாடிக் குனிக்க வல்லார்
கோவிந்தன்தன் அடியார்களாகி
எண்திசைக்கும் விளக்காகி நிற்பார்
இணையடிஎன் தலைமேலனவே"

தென்திசையில் பாண்டிய நாட்டில் இன்று அழகர் கோயில் எனப்படும் திருமாலிருஞ்சோலை, ஆழ்வார்கள் பாடிய திருத்தங்களில் உயர்ந்ததோர் திருத்தலம். இந்த அழகர்மலையில் ஓடுகின்ற "சிலம்பாறு" பெரியாழ்வாரின் மனதைக் கவர்கின்றது.

அந்தப் பாசுரமாவது:

"அலம்பாவெருட்டாக்கொன்று
திரியும் அரக்கரை
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய்
நின்ற கோன்மலை
சிலம்பார்க்கவந்து தெய்வ-
மகளிர்களோடும் சீர்
சிலம்பாறுபாயும்
தென்திருமாலிருஞ்சோலையே"

மூன்றாம் திருமொழி ஏழாவது பாடலில்,

"கனம்கொழி தெள்ளருவி வந்து
சூழ்ந்து அகல்ஞாலமெல்லாம்
இனம்குழுவாடும் மலை
எழில்மாலிருஞ்சோலையதே"

என்றும், மூன்றாம் திருமொழி ஒன்பதாவது பாடலில்,

"ஈட்டியபல்பொருள்கள் எம்பிரா-
னுக்கு அடியுறையென்று
ஓட்டரும்தண் சிலம்பாறுடை
மாலிருஞ்சோலையதே"

என்றும பாடுகிறார்.

(அடுத்த இதழில்முடியும்)

# ஸ்ரீமத்பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான திருமலை திருப்பதி ஸ்ரீகோவிந்தராமாநுஜ பெரியஜீயர்ஸ்வாமி திருநாடலங்கரித்தது

திரு. தி.அ. க்ருஷ்ணதாஸன் - காஞ்சிபுரம்.

"*ஸ்ரீமத்ரங்கபுரீச ரம்யரமணஸ்வாம்*
*யுத்ஸவேஷ்வக்ரத:*
*ஸ்ரீமத்த்ராவிட ஸூக்திகானரஸிகம்*
*தத்பாதஸந்தாரகம் ।*
*ஸ்ரீமத்ஸுந்தரஸம்யமீந்த்ரவிஹித*
*ஸ்ரீவாஸதாஸ்யச்ரியம்,*
*ஸ்ரீகோவிந்தமஹாயதீசமனிசம்*
*த்யாயேம தீனப்ரியம் ।।*

[ஸ்ரீ ரங்கநகரீசனாகிய அழகிய மணவாளப்பெருமாளுடைய புறப்பாடுகளில் முன்பு ஆழ்வாரருளிச்செயலைக் கானம் செய்வதில் சுவையறிந்தவரும், அப்பெருமானுடைய ஸ்ரீபாதந்தாங்குமவரும், நியமிக்கப்பெற்ற - திருவேங்கடமுடையான் கைங்கர்யமாம் செல்வத்தைப் பெற்றவரும், ஏழைகள் திறத்தில் அன்பு பூண்டவருமான ஸ்ரீகோவிந்தராமாநுஜ பெரிய ஜீயர்ஸ்வாமியை இரவும் பகலும் தியானம் செய்யக் கடவோம். ]

ஸ்ரீமதி த்யாதிவிசேஷண விசிஷ்டராய், பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யராய், திருவேங்கடமுடையான் கோவிந்தராஜன் நித்யைச்வர்யத்துக்கும் மேன்மேலும் பெருகிவரும் மஹைச்வர்யத்துக்கும் கோடிதிருவாபரணத்துக்கும் முடிப்பு முத்திரைகளுக்கும் காரணகர்த்தாவான பெரிய கோவில் கேள்வி அப்பன் ஸ்ரீகோவிந்தராமாநுஜ பெரிய ஜீயர்ஸ்வாமி - நிகழும் பவவருடம் கார்த்திகை மாதம் 3ம் தேதி (19-11-94) சனிக்கிழமையன்று திருநாடலங்கரித்தருளினார். மறுநாள் ஸ்ரீஸ்வாமியின் சரமதிருமேனி, கீழ்த்திருப்பதியில் ஆழ்வார் தீர்த்தம் செல்லும் வழியில் உள்ளதாய், இவர்க்கு முன்பெழுந்தருளியிருந்த பல ஜீயர் ஸ்வாமிகளின் திருவரசுகளால் நிறைந்து விளங்கும் - 'ஜீயர் மிட்டா' என்று பிரசித்தி பெற்ற இடத்தில் திருப்பள்ளிபடுத்தப்பெற்றது. பின்பு நித்யாராதனமும், 28, 30-11-94, 1-12-94 ஆகிய இம்மூன்று நாட்களிலும் முறையே மஹாராராதனமும் பார்வணயத்யாராதனமும் திருநாராயணபலியும், மிகவும் சிறந்ததொரு வகையில், ஸ்ரீமத்பரமஹம்ஸ - திருவேங்கடராமாநுஜ சிறிய ஜீயர்ஸ்வாமியின் மேற்பார்வையில் நடைபெற்று முடிவுற்றன.



திருநாடலங்கரித்த இந்த ஜீயர் ஸ்வாமி முதன்முதலில் யதிராஜரான எம்பெருமானாராலும், பின்பு யதிராஜபுநரவதாரபூதரான மணவாளமாமுநிகளாலும் ஜீயர் ஸ்வாமிகளாக அலங்கரிக்கப்பெற்றும் பரம பவித்ரமாக்கப்பெற்ற இந்த மடத்தில் 41ம் பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தரானவர். இந்த மடாதிபதி ஸ்வாமிகளுக்குத் தொன்றுதொட்டே, திருமலை திருப்பதி தேவஸ்தானங்களில் வைதிக தர்மகர்த்ருத்வபதவியும், ஸாதித்தருள - ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்று தொடங்கி அத்யாபககைங்கர்யத்தைத் தலைமையேற்று நிர்வஹிக்கும் பெருமையும், 'சுமந்து மாமலர் நீர் சுடர் தூபங்கொண்டு' புரியும் கைங்கர்ய ஸாம்ராஜ்யமும் ஏற்பட்டு அவை முழுதும் இன்றளவும் ஜீயர் ஸ்வாமிகளால் அவிச்சிந்நமாகவும் பதேபதே அபிவ்ருத்தமாகவும் நடந்துவருவது லோகப்ரஸித்தம்.

இந்த ஜீயர்ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸ்ரீவில்லிபுத்தூரையடுத்த வடகரை என்ற ஊரில் தோன்றியவர். திருவரங்கமாநகரில் பலநாட்கள் நம்பெருமாளுக்கு ஸ்ரீபாதந்தாங்கி

யும் அருளிச்செயலோதியும் அந் தந்தவடிமை செய்து போந்தவர். பின்பு ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ் ராஜகாசார்யர்களான ஸ்ரீரங்க ராமாநுஜ பெரிய (ஸாது) ஜீயர்ஸ்வாமியும் ஸ்ரீவிஷ்ணு சித்தராமாநுஜ சிறிய ஜீயர் ஸ்வாமியும் எழுந்தருளியிருந்த நல்லடிக்காலத்தில் - திருவ ரங்கத்திலிருந்து திருப்பதிக்கெ ழுந்தருளித் திருமலை திருப் பதி தேவாலயங்களில் அத்யா பகராய் நியமிக்கப்பெற்று மிக ச்ரத்தையுடன் தொண்டுபூண் டொழுகி வந்தார். அதற் குப் பின்பு பெரிய ஜீயராஸ் தானத்தில் 40 வது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பர மஹம்ஸ ஸ்ரீஸுந்தரராமாநுஜ பெரிய ஜீயர் ஸ்வாமியின் பரமக்ருபையால் சிறிய ஜீயர் பட்டம் சூட்டப்பெற்று 17-6-75 முதல் 15-6-88 வரையில் கைங் கரியத்தை நிர்வஹித்து, அப் பெரிய ஜீயர் ஸ்வாமி திரு நாடலங்கரித்த பிறகு பெரிய ஜீயர் ஸ்வாமி பதவியை ஏற்று 16-6-88 முதல் 18-11-94 வரை யில், உலகம் போற்றும் வகை யில் திருவேங்கடமுடையானுக் கும் அலர்மேல் மங்கை நாச்சி யார்க்கும் ஸ்ரீகோவிந்தராஜனுக் கும் சக்ரவர்த்தி திருமகனுக் கும் கைங்கர்யம் செய்து கொண்டே, அச்செல்வத்துக்குப் பலனாகத் திருவேங்கடமுடை யான் இவர்க்கு அளித்தருளிய பெரும்பொருட்செல்வத்தை பக வத் பாகவதாசார்ய கைங் கர்யங்களுக்கே உறுப்பாக்கிய தோர் பெருமை வாசாமகோசரம். இந்த ஸ்வாமியைக் கலியுகக் கர்ணன் என்றூலும் பாரிவள் ளல் என்றூலும் அது ஸத்ய வார்த்தையேயன்றி சிறிதும் ஸ்தோத்ரமன்றென்பது உலகம றியும். ஏழையாயிருந்து துன் பத்தின் முடிவெல்லையைக் கண்டவராகையாலே ஏழைகள் திறத்தில் கருணை காட்டி இவர் வழங்கிய பொருள் கணக்கில டங்கா. மேலும் கேண்மின்!

தாம் முதலில் சிறிய ஜீய ராயெழுந்தருளிய பின்பு மிக விரைவிலேயே தமது மடத்தைக் கலைத்துப் புது மடத்தை நிர்மாணம் செய்வித்து 25-1-79ல் அம்மடத்திற்குச் சிலாசா ஸனமிடுவித்து, அதுதன்னை ஸ்ரீகாஞ்சி மஹாவித்வான் ப்ர திவாதி பயங்கரம் அண்ணங் காராசார்ய ஸ்வாமியைத் திருப் பதிக்கு எழுந்தருள்வித்து அவ ரைக் கொண்டுஅச்சிலாசாஸ னத் திறப்புவிழாவினை மிகச் சிறப்பாகக் கொண்டாடி அந்த ஸ்வாமி வியக்கும்படி அவரை ஸத்கரித்தனுப்பியது நாடும் நக ரமும் நன்கறிந்ததே. இவ்விஷ யம் ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியின் ஸ்ரீராமாநுஜன் 370-வது இத ழில் வெளிவந்துள்ளது.

அதற்குப்பிறகு திருச்சானூரில ஓரிடத்தை மடத்தின் ஸொத் தாக விலைக்கு வாங்கி நன் ருக இருப்பிடங்களையமைத்து ஏழைக்கான அர்ச்சக் பரிசா ரகர்களுக்கு மிகக் குறைந்த வாடகைக்கு அவற்றையளித் தார். திருமலையில் சிறிய ஜீயர் மடத்தை நூதனமாகக் கட்டுவித்தார். திருமலையி லும் திருப்பதியிலும் திருச் சானூரிலும், திருநின்றவூரிலும், தாம் பெரிய ஜீயர் ஸ்வாமி யாகப் பட்டமேற்ற பிறகு மடங் களை இந்த்ர பவனமோ வென் னும்படி கட்டுவித்துக் கல் யாண மண்டபங்களையும் ஏற்ப டுத்திப் பொதுமக்களுக்கு உதவி செய்தருளினார். திருநின்றவூ ரிலுள்ள பக்தவத்ஸலப் பெரு மாள் ஸந்நிதியை ஜீர்ணோத் தாரணம் செய்வித்து மிகச் சிறந்த முறையில் மஹாஸம்ப் ரோக்ஷணமும் நடத்தி வைத். தது குறிப்பிடத்தக்கதோர் பெரு மையாகும் இவர்க்கு. இவர் 63 வயதிலேயே திருநாடலங்க ரித்தது மிகவும் வருந்தத்தக்க தாகும். எல்லாம் பகவத் ஸங் கல்பத்தின்படியே நடக்குமாகை யால் நாம் செய்யத்தக்கது ஏது மில்லை.

ஆனாலும் ஒன்று செய்ய முடியும். அதாவது இப் போது சிறிய ஜீயராஸ் தானத்தை அலங்கரித்த ருளாநின்ற ஸ்ரீமத் பரம ஹம்ஸ அப்பன் திருவேங்கடரா மாநுஜ ஜீயர்ஸ்வாமி பெரிய ஜீயர் மடாதிபத்யத்தை ஏற்ற ருளி, அவருகந்ததோர் ஸத்வ் யக்தி சிறிய ஜீயர் ஸ்தா னத்தையேற்று, ஜீயர் ஸ்வாமி கள் இருதிருநாமங்களும் ஒரு மைமனம் படைத்து, ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னித் திருமலையப்பன் அலர்மேல்மங் கைநாச்சியார் ஸ்ரீகோவிந்தரா ஜன் சக்ரவர்த்தி திருமகன் ஆகியவர்களுக்கு வழுவிலாவ டிமை செய்து கொண்டே, தந் தாம் செல்வங்களை பகவத்பா கவதாசார்ய கைங்கர்யங்களில் யதோசிதம் விநியோகம் செய்து வையம் மன்னி வீற்றிருக் கவேணுமென்று திருவேங்கடமு டையான் பூவார் கழல்களிலும் ஸ்ரீகோவிந்தராஜன் பொன்னடி களிலும் மனமார ப்ரார்த்திக்க முடியுமென்றபடி.

இத்தகைய ப்ரார்த்தனையை, அகில ஸ்ரீவைஷ்ணவர் பெருமக் களுக்கும் தாந்தாம் வணங்கும் திவ்யதேசத் தெம்பெருமான்கள் திருவடித்தாமரைகளில் செய்தரு ளுமாறு வேண்டிக்கொண்டு விடைபெறுகிறேன்.



**சிவ-விஷ்ணு அபேதம் :**

அன்பெனும் பிடியில் அகப்படும் மலையாகவும், அன்பே தகளியாக ஆழ்வார் ஏற்றும் ஞானச்சுடர்ஒளியாகவும் பரிணமிப்பது ஏக இறைவனே ஆகும். அவனே இறையடியார்களுக்குப் பரமேஸ்வரனாயும், பாற்கடல் வாசனாயும் பாங்காகக் காட்சி தருகின்றான்!

சிவனும் நாராயணனும் ஒரே பரம்பொருளின் இருவேறு இனிய அருள் வடிவங்களே. இதனையே ஆழ்வார்கள் அருளிச்செய்த திருப்பாசுரங்களும், மூவர் பாடிய தேவாரப் பனுவல்களும் நமக்கு ஐயமற விளக்குகின்றன.



# தேவாரமும் திவ்யப்பிரபந்தமும்

திரு. தெ. சுப்பிரமணியன் - திருநெல்வேலி.



திவ்யப் பிரபந்தம் அருளிய பன்னிரு ஆழ்வார்களுள் முதல் ஆழ்வார்கள் என்று அழைக்கப்பெறுவோர் பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் எனும் மூவராவர். இவர்களுள் ஒருவரான பொய்கையாழ்வார் தனது திருப்பாசுரம் ஒன்றில்,

"அரன் நாரணன் நாமம்;
ஆன்விடை புள் ஊர்தி;
உரைநூல் மறை; உறையும்
கோயில் - வரை நீர்
கருமம் அழிப்பு அளிப்புக் கையது,
வேல் நேமி
உருவம் - எரி கார் மேனி ஒன்று"

எனப் பாடியுள்ளார். இதன் பொருளைக் காண்போம். மேலாம் பரம்பொருளுக்கு இரு திருநாமங்கள் உண்டு என்றும் ஒன்று சிவன் (அரன்); மற்றொன்று திருமால் (நாரணன்). அவ்விறைவனுக்கு வாகனங்களும் இரண்டாகும். ஒன்று காளை (விடை) மற்றொன்று கருடன் (புள்). இருவரின் உறைவிடமும் ஒன்றே தான். ஆம் திருச்சிற்றம்பலம் எனப்படும் சிதம்பரத்தில் கோவிந்தராஜப் பெருமாளையும், நடராஜப் பெருமானையும் ஒருங்கே சேவிக்கலாம். அவ்விறைவனது திருக்கரங்களில் தாங்கும் திருஆயுதங்களும் இரண்டாகும். ஒன்று சூலம், மற்றொன்று சக்கரம் என்றும் நமக்குக் கூறுகின்றார் ஆழ்வார். என்னே அவரின் சிவவிஷ்ணு அபேதக்கொள்கை.

'அரியும் சிவனும் ஒன்று' என்பது ஆன்றோர் வாக்கு. இன்றும் திருநெல்வேலி அருள்மிகு நெல்லையப்பர் திருக்கோயிலில் மூலவருக்கு அருகே பள்ளி கொண்ட திருக்கோலத்தில் வில்வத்தால் ஈசனை வழிபடும் பாவனையில் நெல்லைக் கோவிந்தர் கோயில் கொண்டதே இதற்குச் சான்றாகும். மேலும் சங்கரன்கோவிலில் ஸ்ரீசங்கரலிங்கம், ஸ்ரீகோமதிஅம்மன் சந்நிதிகளுக்கு இடையே ஸ்ரீசங்கரநாராயணர் திருக்கோயில் கொண்டு ஒரே திருமேனியில் பாதி சிவனாயும், பாதி திருமாலாகவும் திருக்காட்சியளிப்பது மற்றும் ஒரு சாட்சி. தவிர தமிழகம் எங்கும் இவ்வாறு பல்வேறு திருக்கோயில்களில் சைவ- வைணவ ஒற்றுமையை நாம் கண்கூடாகக் காணலாம். தவிரவும் சிவபெருமானின் சகஸ்ரநாமங்களில் திருப்பெயர் வருவதும் விஷ்ணு சகஸ்ரநாமங்களில் சிவநாமம் இடம்பெறுவதும் பக்தர்கள் அறிந்ததுதான்.

**சுந்தரரும் திருமங்கை மன்னனும்**

இறையடியார்களுள் பைந்தமிழ்ப் பாக்களால் பகவானைப் பாடிப் பரவிய நாயன்மார்கள், ஆழ்வார்கள் இவ்விருவருமே தமது பாக்களில் உபயோகித்த கற்பனை நயம், கருத்து வளம், உபமானங்கள் இவைகளில்கூட ஒற்றுமை உள்ளது.

கலியன் என்று அழைக்கப்படும் திருமங்கையாழ்வார் ஒரு சமயம் மயிலாடுதுறைக்கருகே திருஇந்தளூரில் எழுந்தருளியுள்ள ஸ்ரீபரிமளரங்கப் பெருமாளைத் தரிசிக்கச் சென்றார். இறைவனின் அர்ச்சாதிருமேனி எழிலில் ஈடுபட்ட அவர் மனதில் ஒரு இனிய கற்பனை. பரவாசுதேவன் பள்ளிகொண்ட அதே அழகிய திருக்கோலத்தில் எழுந்தருளி நேரில் வந்து காட்சி தந்தால் எப்படி இருக்கும் என்றெண்ணிப்பார்த்து மெய்ச்சிலிர்க்கிறார். ஆனால் கள்ளக் கண்ணன் அப்படி ஏதும் செய்யவில்லை எனும் ஆதங்கம். அப்பொழுது பிறக்கிறது ஓர் இனிய திருப்பாசுரம்.

"ஆசை வழுவாது ஏத்தும் எமக்கு
இங்கு இழுக்காய்த்து
அடியோர்க்குத்
தேசம் அறிய உமக்கே
ஆளாய்த் திரிகின்றோமுக்கு

*காசின் ஒளியில் திகழும் வண்ணம்*
*காட்டீர் எம்பெருமான்!*
*வாசி வல்லீர்! இந்தளூரீர்!*
*வாழ்ந்தே போம் நீரே"*

இப்பாசுரத்தில் ஆழ்வார் பரிமளரங்கநாதரை உரிமையுடன் கடிந்து கொள்கிறார். "உனையே கதி என்று எண்ணியிருக்கும் எம் போன்ற அடியவர்களுக்குக்கூட உமது திவ்ய தரிசனம் நீர் தராவிடில் உன்னைக் கருணாமூர்த்தி என்று எப்படிச் சொல்வது? சரி போம். நன்றாக இரும்!" எனக் கோபித்துக்கொள்கிறார். இதே போல ஓர் அற்புத நிகழ்ச்சியைச் சுந்தரமூர்த்தி நாயனார் வாழ்விலும் நாம் காணலாம். பரமனது ஆணையை மீறித் திருவொற்றியூர் எல்லை கடந்த நாயனார் தமது இரு கண்களையும் இழந்தார். திருஏகம்பம் எனப்படும் காஞ்சியில் சிவனருளால் ஒரு கண்பார்வை பெற்றுப் பல சிவத்தலங்களைக் கடந்து முடிவில் ஆரூர்தியாகேசன் சன்னிதியில் நின்று பாடுகிறார். அவரின் பாடலில் ஆதங்கமும், ஆவேசமும் ஒருங்கே காணப்படுகின்றது. மற்றும் ஒரு கண் ஒளியைத் தியாகராஜப் பெருமான் அருள வேண்டும் என்பதே அவரின் ஆசையும், ஆதங்கமும். அவ்வாறு அருளாது காலம் கடத்திச் சோதிப்பதால் பிறந்ததே ஆவேசம்! அங்கு அவர் பாடிய பதிகத்தில் ஒன்றை இங்குப் பார்ப்போம்.

"செந்தண் பவளந் திகழுஞ்சோலை
இதுவோ திருவாரூர்
எந்தம் அடிகேள் இதுவே ஆமாறு
உமக்கு ஆட்பட்டோர்க்குச்
சந்தம் பலவும் பாடும் அடியார்
தங்கண் காணாது
வந்தெம் பெருமான் முறையோ
என்றால்
வாழ்ந்து போதீரே!"

"இசையால் உனைப்பாடும் உமது அடியவனான எனது மற்றும் ஒரு கண் பார்வைத் தர உனக்கு மனம் இல்லையோ? சரி, சரி நீர் நன்றாக இரும்" என்பதே இதன் பொருள்.

ஆழ்வாரோ "உமக்கே ஆளாய்த்திரிகின்றோம்" என்கிறார். நாயனாரோ "உமக்கு ஆட்பட்டோர்க்கு" என்கின்றார். கோபிப்பதில்கூட ஒற்றுமையைப் பாருங்களேன்! "வாழ்ந்தே போம் நீரே!" என முறைக்கின்றார் ஆழ்வார்; "வாழ்ந்து போதீரே" என முறையிடுகின்றார் நாயனார்.

## மணிவாசகரும் தொண்டரடிப்பொடியும்

திருப்பள்ளியெழுச்சி என்பது இறைவனைத் துயிலுணர்த்தப் பாடும் பாட்டாகும். மார்கழி மாதமே ஹரி - ஹர அபேதத்தை நன்கு எடுத்துக்காட்டும். சிவாலயங்களில் திருவெம்பாவைப் பாடல்களும், விஷ்ணு கோயில்களில் திருப்பாவையும் ஒருங்கே ஒலிக்கக் கேட்கலாம். இதனால் தானோ என்னவோ ஸ்ரீகிருஷ்ணன் கீதையில் "மாதங்களில் நான் மார்கழி" என்று கூறியுள்ளான் போலும்!

பாவைப்பாட்டு வரிசையில் இடம்பெறுபவை திருப்பாவை - திருவெம்பாவைப் பாசுரங்கள். நாம் இங்கு பார்க்க இருப்பவை திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள்.

108 திவ்ய தேசங்களுள் முதலாவதான திருவரங்கத்தில் வைகறைப் பொழுதில் தொண்டரடிப் பொடியாழ்வார் அரங்கநாதனைத் துயில் எழுப்புகிறார். மணி ஓசையுடன் கலந்து ஒலிக்கிறது அவரின் பாசுரம்:

*"கதிரவன் குணதிசைச் சிகரம்*
*வந்தணைந்தான்*
*கனையிருள் அகன்றது காலையம்*
*பொழுதாய்*
..............................................
*அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே"*

என்பதே அத்திருப்பாசுரம்.

திருப்பெருந்துறையில் புலர் காலைப் பொழுதில் கூப்பிய கரங்களுடன் சிவபெருமானைத் துயில் உணர்த்துகிறார் மாணிக்க வாசகர். இதோ கணீர் என்ற குரலில் அவரது பைந்தமிழ்ப் பாடல்:

*"அருணன் இந்திரன் திசை*
*அணுகினன்*
*இருள் போய் அகன்றது உதயம்*
..........................................
*அலைகடலே பள்ளி எழுந்தருளாயே"*

என்பதே அப்பாட்டு.

இருவரும் சூரியனைக் "கதிரவன்" என்றும் "அருணன்" என்றும் குறிப்பிடுவதும், கிழக்குத் திசையை "குணதிசை" என்றும் "இந்திரன் திசை" என்றும் அழைப்பதும் அவர்களின் கற்பனை ஒற்றுமையைக் காட்டுகிறது.

## சம்பந்தரும் திருமங்கை மன்னனும்

தாங்கள் மேற்கொண்ட திருவருளைப் பாடும் பணியில் ஆழ்வாரும் நாயனாரும் கையாண்ட உவமைகளில்கூட நாம் ஒற்றுமையைக் கண்டு உணரலாம்.

ஸ்ரீதேவியைத் தனது பிரிய மகளாகப் பாவித்து, அவள் திருமாலைக் கூடாது வருந்துவது போலப் பாடியுள்ள தாயார் திருப்பாசுரம் ஒன்றில் திருமங்கையாழ்வார்,

"சொல் உயர்ந்த நெடுவீணை
முலைமேல் தாங்கித் தூமுறுவல்

நகை இறையே தோன்ற நக்கு
மெல் விரல்கள் சிவப்பெய்தத்தடவி..."

என்று பாடுகின்றார்.

கோளறு திருப்பதிகத்தில் திரு ஞானசம்பந்தர்,

வேயுறு தோளிபங்கன் விடம்
உண்ட கண்டன்
மிக நல்ல வீணை தடவி......"

என்று பாடுகிறார். "ஆழ்வார் நெடுவீணை தடவி" என்று கற்பனை செய்ததும்; நாயகனார் "மிகநல்ல வீணை தடவி" என்று பாடியதும் ஆழ்ந்து அனுபவிக்கத்தக்கது.

## நாவுக்கரசரும் நம்மாழ்வாரும் :

பிறவி எப்படி இருந்த போதிலும் பக்தி, இறைவனில் ஈடுபாடு வேண்டும். அப்படிப்பட்டவர்களே தமக்கும் அன்பர்கள் என மெய்யடியார்களாகிய அப்பர் பெருமானும், நம்மாழ்வாரும் பாடியுள்ளனர்.

நாவுக்கரசர் தமது தேவாரத்தில்,

"ஆவுரித்துத் தின்னும்
புலையராயினும்
கற்றைவார் சடைக் கரந்தார்க்கு
அன்பராகில் அவர்தாமே
நாம்வணங்கும்
கடவுளாரே"

என்றும்,

நம்மாழ்வார் திவ்யப்பிரபந்தப் பாடல் ஒன்றில்,

"குலம் தாங்கு சாதிகள் நாலினும்
கீழ் இழிந்து எத்தனை
நலந்தான் இலாத சண்டாள
சண்டாளர்கள் ஆயினும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல்
மணி வண்ணற்கு ஆள் என்று
உள் கலந்தார் அடியார்
தம் அடியார் எம் அடிகளே"

என்றும் உறுதிப்படக் கூறியுள்ள ஒற்றுமை சிந்தனைக்கு விருந்தாகும்.

ஆகவே குலம், பதவி, புகழ், செல்வம் அத்தனையும் இருந்தும் பக்தி இல்லாதவரைக் கண்டு மெய்யடியார்கள் அஞ்சியதையும்; இவைகள் ஏதும் இல்லாவிடினும்கூட ஒரு சண்டாளன் அல்லது புலையனாலும்கூட இறையன்பு கொண்டவனாய் இருப்பின் அவனுக்குத் தம்மையே அடிமையாகக் கூட அம்மெய்யடியார்கள் தயங்கவில்லை என்பது இப்பாக்களால் நாம் அறியும் உண்மை.

## மணிவாசகரும் குலசேகரரும்

ஆழ்வார்களாயினும் சரி, நாயன்மார்கள் ஆயினும் சரி ஊர், பெயர் உற்றார், செல்வம், பதவி இவைகள் எதையும் விரும்பவில்லை. இறைவனது திவ்ய கருணையையும் , அவனது திருவடிப்பேற்றையுமே வேண்டி நின்றனர்.

"உற்றாரை யான் வேண்டேன்
ஊர் வேண்டேன் பேர் வேண்டேன்
கற்றாரை யான் வேண்டேன்"

என்று திருப்புலம்பலில் (திருவாசகம்) மணிவாசகர் புலம்புகிறார். இதேபோலக் குலசேகராழ்வாரும்,

"ஊனேறு செல்வத்து உடற்பிறவி
யான் வேண்டேன்"

என்றும்,

"வானாளுஞ் செல்வமும், மண்ணரசும்
யான் வேண்டேன்"

என்றும் சூளுரைத்து அரசபதவியைத் துறந்து அணிஅரங்கன் சேவை செய்ய ஆழ்வாராக மாறியது ஒப்பு நோக்கி மகிழத்தக்கது.

தொண்டரடிப்பொடியாழ்வாரும் தமது திருப்பாசுரத்தில் "இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்" என மறுத்து "அச்சுதா, அமரர் ஏறே, ஆயர்தம் கொழுந்தே" என அழைத்துச் சுவைப்பதையே விரும்புகின்றார்.

"குனித்த புருவமும், கொவ்வைச்
செவ்வாயில் குமின் சிரிப்பும்
பனித்த சடையும், பவளம்போல்
மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய எடுத்த பொற்-
பாதமும், காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே"

என திருநாவுக்கரசரும் இறை பணி செய்ய உதவினால் இவ்வுடல், பிறவி தனக்கு வேண்டும் என்று கேட்கின்றார்.

இறைவனுககுப் பல்லாண்டு பாடுவதிலும் கூட ஒற்றுமையையே காணமுடிகிறது. எனவே இதுவரை தேவார, திவ்யப்பிரபந்தப் பாடல்களில் மிளிர்நத சொல், கற்பனை மற்றும் கருத்து ஒற்றுமைகளை உதாரணங்களுடன் சிந்தித்தோம்.

வாழ்க நாயன்மார் திருப்புகழ்!

வளர்க ஆழ்வார்கள் திருத்தொண்டு!!



## செய்திச் சுருக்கம்

### வைணவ மாநாடு

சென்னை ஸ்ரீவைஷ்ணவ மகா சங்கத்தின் ஆதரவில் 69-வது வைணவ மாநாடு ஒன்று அண்மையில் சென்னையில் மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இது போது புதுவை மாநில முதல்வர் திரு. வி. வைத்யலிங்கம் அவர்களின் திறப்புரை வாசிக்கப்பட்டது. 'திருமால்' இதழ் ஆசிரியர் திரு. குமாரவாடி எஸ். ராமானுஜாசார்யார் அவர்கள் மகாநாட்டினைத் துவக்கிவைத்துப் பேசுகையில் வைணவர்களின் சமயக் கடமையினையும், சமுதாயக் கடமையினையும் வலியுறுத்திப் பேசினார். இவ்விழாவிற்கு 'கலைவண்ணச் செம்மல்' திரு. டி. வரதப்பன் அவர்கள் தலைமை வகித்தார். இதுபோது, 15 சிறந்த வைணவச் சான்றோர்களுக்கு 'ஸ்ரீவைஷ்ணவச் செல்வர்' பட்டம் கொடுக்கப்பட்டது. மேலும் இம்மாநாட்டின் போது திரு. ஏ.வி. கன்னய்யநாயுடு அவர்களால் தொகுப்பட்ட 2000 பாடல்கள் கொண்ட 'நாலாயிரத் திவ்ய பிரபந்தம்' எனும் நூல் வெளியிடப்பட்டது.

சென்னையில் 64-ஆவது வைணவ மகளிர் மாநாடு ஒன்று வெகுச்சிறப்பாக இரண்டு நாட்கள் நடைபெற்றன. இம்மாநாட்டினை திருமதி. பி.ஏ. கௌசல்யாதேவி வேணுகோபால் அவர்கள் திறந்துவைக்க, திருமதி. விஜயலட்சுமி சுப்பராஜ் அவர்கள் தலைமை வகிக்க திருமதி. நந்தினி ராஜேந்திரன் அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றனர்.

* * *

### புதிய செயலாட்சித்தலைவர்

திரு. என். ரமேஷ்குமார் ஐ.ஏ.எஸ். அவர்கள் 7-1-95 அன்று திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவராக பொறுப்பேற்றார். இவர் ஏற்கனவே சுமார் இரண்டரை ஆண்டுகள் இணைச் செயலாட்சித் தலைவராக தேவஸ்தானத்தில் பணி புரிந்தவராவார்.

* * *

### பாரிவேட்டை உற்சவம்

15-1-95 பொங்கல் திருநாளன்று திருமலையில் 'பாரிவேட்டை' எனும் சமய நிகழ்ச்சி வெகுச்சிறப்பாக நடைபெற்றது. அன்று திருமலைக்கோயில் உத்ஸவமூர்த்தி பாரிவேட்டை மண்டபத்திற்கு எழுந்தருளிச் செய்து, பக்தர்களுக்கு நல்லருள்பாலித்தார்.

* * *

### வைகுண்ட ஏகாதசி

திருமலையில் 12-1-95 அன்று 'வைகுண்ட ஏகாதசி' திருநாள் வெகுச்சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீதேவி பூதேவி உடன் அமர, ஸ்ரீநிவாசன் தங்கத்தேரில் திருமலை மாடவீதிகளில் திருவீதிவலம் புரிந்து அன்று அங்கு குழுமியிருந்த ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு திருவருள் புரிந்த காட்சி கண்ணுக்கும் , கருத்துக்கும் பெருவிருந்தாக அமைந்தது. அத்திருநாளன்று கோயில் வருமானம் ரூ. 33,00,000 ஆகும்.

* * *

### திருமலையில்

26-12-94 அன்று ஆந்திர மாநிலத்தின் அரசு அமைச்சர்களான திரு. இந்திராரெட்டி, திரு. கா. முத்துகிருஷ்ணம நாயுடு ஆகியோர்களும், ஆந்திர மாநில முதல்வர் திரு. என்.டி. ராமாராவ் அவர்களின் துணைவியாரான திருமதி. லக்ஷ்மி பார்வதி அவர்களும் திருமலைக்கு வருகை புரிந்தனர்.

* * *

### நன்கொடை

சிங்கப்பூரைச் சார்ந்த லீலா ஹரிஹரா எனும் பக்தர் ஒருவர் 1-1-95 அன்று தேவஸ்தானம் நடத்திவரும் நித்ய அன்னதான திட்டத்திற்கென ரூ. 1 இலட்சம் நன்கொடை வழங்கினார். மேலும் இந்தியாவின் காளிபாத் எனும் ஊரைச்சேர்ந்த தொழிலதிபர் ஒருவரான திரு. அருண்குமார் அகர்வால் அவர்கள் தேவஸ்தான 'காடு மேம்பாட்டுத்திட்டத்திற்கென ரூ. 1 இலட்சம் நன்கொடை அளித்தார். இது தவிர அண்மையில் மலேசியாவைச் சார்ந்த பக்தர் ஒருவர் ரூ. 2,40,560 மதிப்புள்ள 7706 டாலர்களை தேவஸ்தானத்திற்கு நன்கொடை அளித்தார்.

* * *

### மகா சம்ப்ரோக்ஷணம்

தமிழ்நாடு மயிலாடுதுறையைச் சார்ந்த திரு. இந்தளூர் அருள்மிகு பரிமள அரங்கநாதர் திருக்கோயிலில் 'மகா சம்ப்ரோக்ஷண' விழா 6-2-95 அன்று

வெகுச்சிறப்பாக நடைபெற உள்ளது.

* * *

## காஞ்சியில்....

நடமாடும் தெய்வமாய் விளங்கி நானிலத்தில் உள்ளவர்களை நல்வழிப்படுத்திவரும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீபரமாச்சாரியார் சுவாமிகளின் முதலாமாண்டு நினைவஞ்சலியை ஒட்டி 1-1-1995 ஞாயிறு மாலை 3 மணிக்கு காஞ்சி ஸ்ரீசங்கரமடம் ஸ்ரீபரமாச்சாரியார் சுவாமிகள் அதிஷ்டானம் முன்பு "தெய்வதரிசனம்" என்ற தொகுப்புநூல் வெளியிடப்பட்டது. நூல்களை ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் வெளியிட்டுப் பல்வேறு துறைகளில் சிறந்து விளங்கும் 21 பேருக்கு காஞ்சிகாமகோடி பீடம் சிறப்பு விருந்தினை வழங்கினார். விழாவில் ஸ்ரீசங்கர விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அருளுரை ஆற்றினார்கள். நூல் தொகுப்பாசிரியர் கவிஞர நெல்லை பாலு அவர்கள். இவ்விழாவில் மயிலாடுதுறை போட்டோ என். ராமகிருஷ்ணா அவர்களுக்கு "புகைப்பட மாமணி" என்ற சிறப்பு விருது ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் திருக்கரங்களால் வழங்கப்பட்டது.

* * *

## பிரிவு வாழ்த்துரை மற்றும் வரவேற்பு விழா

சுமார் 3 வருடங்கள் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் செயலாட்சித் தலைவராக பணிபுரிந்து அண்மையில் பதவி மாற்றலாகிச் சென்ற திரு. டி.வி.எல்.என். மூர்த்தி, ஐ.ஏ.எஸ். அவர்களுக்கு 9-1-95 அன்று திருப்பதியில் தேவஸ்தான தலைமை அலுவலகக்கட்டிட வளாகத்தில் சிறப்பு பிரிவு வாழ்த்துரை வழங்கப்பட்டது. இது சம்பந்தமாக ஏற்பாடு செய்யப்பட்ட விழாவிற்கு தி.தி. தேவஸ்தான இணைசெயலாட்சித் தலைவர் திரு. சி.எச். சத்யநாராயணா அவர்கள் தலைவகிக்க, தேவஸ்தான ஊழியர்நல அலுவலர் திரு. வெங்கட்ராமரெட்டி அவர்கள் கூட்டத்தினரை வரவேற்றார். இதுபோது பல்வேறு துறைகளைச் சார்ந்த பல ஊழியர் தலைவர்கள் திரு. மூர்த்தி அவர்களின் செயல்பாட்டினைப் போற்றி உரையாற்றினர். பிறகு ஊழியர் சார்பில் திரு. மூர்த்தி அவர்களுக்கு நினைவுச்சின்னமும், பாராட்டுகளும் வழங்கப்பட்டன. பின்னர் தற்போது தி.தி. தேவஸ்தானத்தின் புதிய செயலாட்சித் தலைவராக பதவி ஏற்ற திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ். அவர்களுக்கு ஊழியர் மற்றும் அலுவர் தரப்பில் வரவேற்பு அளித்துப் பேசுகையில், திரு. ரமேஷ்குமார் அவர்கள் இதற்கு முன்பு தி.தி. தேவஸ்தானத்தின் இணைச்செயலாட்சித் தலைவராக பணிபுரிந்தபோது அவர் ஆற்றிய நிருவாகச் செயல்திறனைப்போற்றி, அவர்தம் பதவிக்காலத்தில் தேவஸ்தானம் மேலும் தன்னைப் பலவகைகளில் உயர்த்திகொள்ளும் என்று கூறி, அதற்கு ஊழியர்கள் பல நிலைகளில் ஒத்துழைப்பு தருவார்கள் என்று இதுபோது பலர் உறுதியளித்தனர்.

## அறிவிப்பு

**திருமலை திருப்பதி தேவஸ்தானம் அந்தந்த மாநில இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறையின்கீழ் பதிவு செய்யப்பெற்றக் கோயில்கள் பயனுறும் வகையில் கீழ்வரும் சலுகைகள் வழங்கியுள்ளது.**



கோயில்களுக்குத் தேவையான கோயில்குடைகளை தி.தி.தேவஸ்தானம் 50% தள்ளுபடி விலையில் வழங்கி வருகிறது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் இரண்டு குடைகளுக்காக ரூ.900/-அனுப்புதல் வேண்டும்.



கோயில்களுக்கான ஒலிப் பெருக்கிக் கருவிகளை 50% தள்ளுபடி விலையில் தி.தி. தேவஸ்தானம் வழங்கிவருகின்றது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் ரூ. 3370/- அனுப்புதல் வேண்டும்.

**முழுவிபரங்களுக்குச் 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.**

**Edited and published on behalf of T.T. Devasthanams by N. S. Rama Murthy, M.A., and Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507.**

